# ஸம்பிரதாய பரிசயம்




(முன் தொடர்ச்சி)

[முன்னிதழில் தெரிவித்தபடி ஆளவந்தார் தொடங்கி மேலுள்ள ஆசாரியர்களைப்பற்றிச் சுருக்கமாகத் தெரிவிக்கப்படுகிறது.]

**ஆளவந்தார்.** இவர் ஸ்ரீமந்நாதமுனிகளின் திருப்பேரனார். உடையவருடைய ஆசாரியர்களுக்கு ஆசாரியர். ஆடி உத்தராடத்தில், காட்டு மன்னார் ஸந்நிதியில் திருவவதரித்தார். ஒப்புயர்வற்ற மஹாவித்வான். ஆகமப்ராமாண்யம், ஸித்தித்ரயம், கீதார்த்தஸங்க்ரஹம், ஸ்தோத்ரரத்நம், சதுச்ச்லோகி முதலிய க்ரந்தங்கள் அருளிச் செய்தவர். இவருடைய கடாக்ஷத்தினாலேயே உடையவர் ஸித்தாந்த ப்ரவர்த்தகரானார். யமுனைத்துறைவர், யாமுநாசார்யர் என்பதும் இவரையே.



**பெரியநம்பி.** ஆளவந்தாருடைய சிஷ்யர்களுள் இவர் தலைவர். உடையவருடைய ஸமாச்ரயணாசார்யர். இவரே ஆளவந்தாருடைய நியமனத்தினால் உடையவரை விஷயீகரித்து தர்சனப்ரவர்த்தகராக ஆக்கினார். வாக்யகுருபரம்பரையில் பராங்குசதாஸர் என்பது இவரையே. மஹாபூர்ணர் என்பதும் இவரையே. இவருடைய திருவம்சஸ்தர்கள் அனேக திவ்யதேசங்களில் ஸ்தலாசார்ய புருஷர்களாக விளங்கிவருகிறார்கள்.

**உடையவர்.** எம்பெருமானார், ஸ்ரீராமாநுஜர், ஸ்ரீ பாஷ்யகாரர், யதீந்திரர் இத்யாதி திருநாமங்களினால் வழங்கப்பெற்ற ஜகதாசார்யர் இவரே. ஆதிசேஷனுடைய அபராவதாரமாய் ஸ்ரீபெரும்பூதூரில் சித்திரைத் திருவாதிரையில் அவதரித்தார். ஆளவந்தாருடைய சிஷ்யர்களான பெரியநம்பி, திருமலைநம்பி, திருக்கோட்டியூர்நம்பி, திருமாலையாண்டான் திருவரங்கப்பெருமாளரையர் என்னும் குரவர்கள் ஐவரை ஆசார்யர்களாகக்கொண்டவர். திருக்கச்சிநம்பிகளிடத்தில் மிக்க ப்ராவண்யமுடையவர். முதலியாண்டான், எம்பார், கூரத்தாழ்வான், அருளாளப் பெருமாளெம்பெருமானார், அனந்தாழ்வான் முதலான பலபல மஹான்களுக்கு ஆசார்யர். இவருடைய ப்ரதான சிஷ்யர்கள் எழுபத்துநான்கு ஸிம்ஹாஸநாதிபதிகளென்று சிறப்புப் பெற்று விளங்கி வருகிறார்கள். ஸ்ரீபாஷ்யம், வேதாந்ததீபம், வேதாந்தஸாரம், கீதா பாஷ்யம், வேதார்த்த ஸங்க்ரஹம், நித்யம், கத்யத்ரயம் என்னும் திவ்ய க்ரந்தங்களை அருளிச்செய்தவர்.



**உடையவருடைய சிஷ்ய பரம்பரை.** உடையவரிடமிருந்து சிஷ்யர்களின் பரம்பரை பல்பல கிளைகளாகப் பெருகிவந்திருப்பினும் ஸுப்ரஸித்தமான பரம்பரை யொன்றை இங்கு விவரிப்போம்.

**எம்பார்.** மதுரமங்கலமென வழங்கி வருகிற மழலை மங்கலத்தில் தைபீ புனர்வஸுவில் திருவவதரித்தவர். உடையவர்க்குச் சிறிய தாயார் குமாரர். ராமாநுஜ பதச்சாயா என்பது இவர்க்குச் சிறப்பு. எம்பாரும் கூரத்தாழ்வானும் ஸமாநஸ்கந்தர்களான ஆசாரியர்கள்.

**பட்டர்.** ஸ்ரீபராசரபட்டரென்பதும் இவரையே. கூரத்தாழ்வானுடைய திருக்குமாரர். இவர் தமது திருத்தகப்பனாரிடத்திலும் எம்பாரிடத்திலும் அர்த்த விசேஷங்கள் கேட்டவர். ஸ்ரீரங்கநாச்சியாரால் புத்ரஸ்வீகாரமாக வளர்த்துக்கொள்ளப்பட்டவர். ஸகல சாஸ்த்ரபாரங்கதர். திவ்யப்ரபந்தங்களில் வெகு அழகிய நிர்வாஹங்கள் அருளிச்செய்தவர். பகவத்குணதர்ப்பணமென்கிற ஸஹஸ்ரநாம பாஷ்யம் அஷ்டச்லோகீ, ஸ்ரீரங்கராஜஸ்தவம், ஸ்ரீ குணரத்நகோசம், க்ரியாதீபமென்னும்ரீத்யம், கைசிக புராண வியாக்கியானம் முதலானவை இவரருளிச் செய்தவை. தமிழில் மஹாவித்வானாக ப்ரஸித்தரான பிள்ளைப்பெருமாளையங்கார் இவருடைய சிஷ்யர்.

**நஞ்சீயர்.** இவர் அத்வைத ஸம்பிரதாயத்திலிருந்து பட்டரால் திருத்திப்பணி கொள்ளப்பட்டவர். முன்னிலைமையில் வேதாந்திகள் என்றும் மாதவாசார்யர் என்றும் ப்ரஸித்தர். பட்டர் திருவடிகளில் ஆச்ரயித்த பின்பு உத்தமாச்ரமியாகி நஞ்சீயரென்று திருநாமம் பெற்றார். திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரப்படி உரையும் மற்றுஞ்சில திவ்யப்ரபந்தங்களுக்கு வியாக்கியானமும் ஸ்ரீஸூக்த பாஷ்யமும் அருளிச்செய்தார். [இப்போது சிலர் வெளியிட்டிருக்கும் ஸ்ரீஸூக்தபாஷ்யம் இவருடையதன்று] பங்குனியுத்தரத்தில் இவரவதாரம்.

**நம்பிள்ளை.** நஞ்சீயருடைய சிஷ்யர்களில் தலைவர். வரதராஜாசார்யர் என்பது இவருடைய நிஜநாமதேயம். பிறகு லோகாசார்யர் என்கிற சிறப்புப்பெயருண்டாயிற்று. இவருடைய ஸகலசாஸ்த்ர ப்ராவீண்யம் வாசாமகோசரம். திவ்யப்ரபந்தங்களிலும் ஸ்ரீரர்மாயணாதிகளிலும் விசேஷார்த்தங்களெல்லாம் இப்பேராசிரியர் முகமாகவே வெளியாயின. கார்த்திகையில் கார்த்திகைநாளில் திருவவதாரம்.

**வடக்குத்திருவீதிப்பிள்ளை.** நம்பிள்ளையின் சிஷ்யகோடிகளில் தலைவர். பெரியவாச்சான் பிள்ளையோடுகூடவே ஸகலார்த்தங்களும் கேட்டவர். திருவாய்மொழிக்கு ஈடு முப்பத்தாறாயிரப்படியென்கிற வியாக்கியானம் பட்டோலைகொண்டவர். திருநாமம்-ஸ்ரீக்ருஷ்ணபாதர். வடக்குத் திருவீதிப்பிள்ளையும் பெரியவாச்சான்பிள்ளையும் ஸமாநஸ்கந்தர்களான ஆசார்யர்கள்.

**பிள்ளைலோகாசார்யர்.** வடக்குத்திருவீதிப்பிள்ளையின் திருக்குமாரர். ஆசார்ய ஹ்ருதயம் முதலிய அத்யாச்சர்ய க்ரந்தங்களருளிச்செய்த அழகிய மணவாளப்பெருமாள் நாயனார்க்குத் திருத்தமையனார். (இருவரும் நைஷ்டிகப்ரஹ்மசாரிகள்.) இவர் பேரருளாளனுடைய அபராவதாரர். நம்பிள்ளையின் திருநாமமாகிய உலகாசிரியர் என்பதே இவர்க்குச் சாத்தப்பட்டது. இவருடைய திவ்யஸூக்திகள் அவதரிக்கவில்லையாகில் இவ்வுலகம் இருள் தருமாஞாலமே. பகவதவதாரம் போலவே இவரவதாரமும் போற்றத்தக்கது. ஐப்பசியில் திருவோணத்தில் கோயிலில் திருவவதாரம்.

திருவாய்மொழிப்பிள்ளை. பிள்ளைலோகாசார்யருடைய திருவடிகளில் தலைவர். வைகாசி விசாகத்தில் திருவவதரித்தவர். ஸ்ரீசைலநாதார்யரென்பது இவர் திருநாமம்.

மணவாளமாமுனிகள். திருவாய்மொழிப்பிள்ளையின் திருவடிகளில் தலைவர். ஆழ்வார்திருநகரியில் ஐப்பசியில் திருமூலத்தில் எம்பெருமானாருடைய அபராவதாரமாகத் தோன்றியவர். ஸகல சாஸ்த்ரங்களிலும் மிகத் தெளிவான ஞானம் பெற்றவர். இவருடைய திவ்யஸூக்திகளின் பெருமை ஒப்புயர்வற்றது. ஸ்ரீரங்கநாதனுக்கும் ஆசார்யராக அமைந்தவர். ஆசார்யரென்கிற வ்யபதேசம் இவர்தமக்கே முக்கியமாக இணங்குமென்பது இவருடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளில் அவகாஹித்தவர்களுக்கு அறியவெளிதாம். பூர்வாசார்ய பரம்பரை இவரளவிலே விச்ராந்தம். அஷ்டதிக்கஜ ஸ்தாபகரிவர்.

ஸ்ரீநிகமாந்தவாசிரியர். புரட்டாசித் திருவோணத்தில் திருவேங்கடமுடையானுடைய திருமணியின் அம்சமாகக் கச்சிப்பதியில் ஸ்ரீதீபப்ரகாசன் ஸந்நிதியருகில் திருவவதரித்தவர். ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரர். கவிதார்க்கிகஸிம்ஹம். வேதாந்தாசார்யர் இத்யாதி பிருதாவளிகளைப் பெற்றவர். பல க்ரந்தங்களையருளிச்செய்தவர். ஸ்ரீவைஷ்ண வஸித்தாந்தத்திற்கு வயிரத்தூணனவர்.

இப்படிப்பட்ட ஆசாரியர்கள் திருவவதரித்ததனால் இந்நிலவுலகம் பெருமை பெற்றுள்ளது. இவர்களது வைபவங்களை (அல்லது) திருநாமங்களை நாடோறும் சிந்தனைசெய்வதே சேமநிதியாகும். ... ... ...

# அத்யாபக பாடங்களின் அநுவ்ருத்தி

தொண்டை நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு ஆகிய மூன்று நாடுகளிலுமுள்ள அத்யாபகஸ்வாமிகள் திவ்யப்ரபந்தங்கள் ஸேவிக்கும்போது அடியேன் ஸமயவிசேஷங்களில் உடனிருந்து ஊன்றிக் கவனித்த காலங்களில் பாடங்களில் பிறழ்வுகள் நேர்ந்திருப்பது எல்லா நாடுகளிலும் ஏகரூபமாகவே யிருப்பதை நோக்கி வியப்படைந்தவன். பாசுரங்களில் சில வாக்கியங்கள் ஸ்வல்ப பேதத்துடன் இரண்டிடங்களில் வரும். அந்த பேதத்தை உற்று நோக்காமல் இரண்டிடங்களிலும் ஒரேவிதமாகவே ஸேவிப்பது பல அத்யாபகர்களின் இயல்பாகக் காண்கிறது. இதன்கீழ் நாம் கொடுக்கும் சில உதாஹரண வாக்கியங்கள் காண்க.

1. திருப்பாவையில் *ஒருத்தி மகனாய் பாசுரத்தில் "கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன்வயிற்றில்" என்றுள்ளது. நாச்சியார் திருமொழியில் (14-7) *பொருத்தமுடைய நம்பியையென்னும் பாசுரத்தில் "கருத்தைப் பிழைத்துநின்ற அக்கருமாமுகிலைக் கண்டீரே" என்றுள்ளது. இங்கு 'கருத்தைப் பிழைப்பித்துநின்ற' என்பது கிடையாது. ஆகிலும் இரண்டிடத்திலும் 'கருத்தைப் பிழைப்பித்து' என்றே ஸேவித்துவருவது பெரும்பான்மை.

2. திருவாய்மொழியில் (4—10—10) *உறுவதாவதெத்தேவு மென்கிற பாட்டினீற்றடியில் "குறிய மாணுருவாகிய நீள்குடக்..." என்றுள்ளது. பெரிய திருமொழி அஞ்சாம்பத்து முதற்பாட்டினிரண்டாமடியில் "குறிய மாணியுருவாய கூத்தன்" என்றுள்ளது. இங்கு "குறியமாணுருவாகிய" என்று கிடையாது; விருத்தத்திற்குப் பொருந்தவும் மாட்டாது. ஆனாலும் இரண்டிடத்திலும் 'குறிய மாணுருவாகிய' என்றே ஸேவித்து வருகிறார்கள். திருத்தினாலும் திருந்தாதார் பலர்.

3. *புள்ளின்வாய் கீண்டானென்பது பலவிடங்களில் வருகிறது. முதல் திருவந்தாதியில் *ஊன்ற முலைத்தலை நஞ்சுண்டென்னும் பாட்டில் 'பொருதுடைவு கண்டானும் புள்வாய் கீண்டானும்' என்றுள்ளதேயொழிய 'புள்ளின்வாய் கீண்டானும்' என்று கிடையாது. (அதில் பெரிய பிழையுண்டு.) ஆனாலும் *புள்ளின்வாயென்றே ஓதிவருகிறார்கள். "அகலிடத்தையாராய்ந்து அது திருத்தலாவதே".

4. பெரிய திருமொழியில் (11-2-10) *வென்றி விடையுடன்* என்கிற பாட்டின் இரண்டாமடி "மன்றில் மலிபுகழ் மங்கைமன் கலிகன்றி சொல்" என்றுள்ளது. மேலே (11-8-10) *குன்றமெடுத்தாநிரை காத்தவன்* என்கிற பாட்டின் இரண்டாமடி "மன்றில்புகழ் மங்கைமன் கலிகன்றி சொல்" என்பதேயன்றி இங்கு (மலி) கிடையாது. அந்த விருத்தம் வேறு, இந்த விருத்தம் வேறு. இவ்விடத்திற்கு (மலி) சேராது. ஆயினும் பெரிய திருமொழியின் சாத்துப் பாசுரமானவிதனில் (மலி) சேர்த்தே பலர் ஓதிவருகின்றனர். இங்ஙனே பல காட்டவேண்டியவையுள.

நாலாயிர திவ்யப்பிரபந்தமூலம் பல பதிப்புகள் ஏறியிருக்கின்றதல்லவா? இப்போது நாம் இங்குக் காட்டிய அபத்த பாடங்கள் எந்தப் பதிப்பிலும் காணக் கிடைக்காது. சிலர் புத்தகங்களை ஊன்றிப் பார்ப்பதேயில்லை; சிலர் பார்த்தாலும் அதைப் பிழையாக நினைத்துவிடுகிறார்கள். நூற்றுவரில் ஒருவரிருவர் இப்பிழைகளையகற்றி ஸேவிப்பவர்களிருக்கக்கூடும். பெரும்பாலும் பிழைகள் ஸமரூபமாகவே வியாபித்திருக்கின்றன. இங்ஙனே யெடுத்துக்காட்டக்கூடிய பிறழ்வுகள் அனேகமுண்டு. தனித்தனி சொற்களில் சேர்ந்துள்ள பிழைகளோ அபரிமிதம். அதையும் சிறிது காட்டுகிறேனிங்கு.

'தெரியில்' என்று ஒரு சொல்; 'தெரியல்' என்று வேறொரு சொல். தெரியில் என்பதற்கு 'தெரிந்தால்' என்று பொருள். 'தெரியல்' என்பதற்கு மாலையென்று பொருள். திருப்பாவை முப்பதாம் பாட்டில் 'அணி புதுவைப் பைங்கமலத்தண் தெரியல் பட்டர் பிரான்' என்பது உள்ள பாடம். இங்கே தெரியிலுக்கு ப்ரஸக்தியே கிடையாது. ஆனாலும் தெரியில் என்று ஸேவிப்பவர்களே மலிந்துள்ளார்கள். "உன்றன்னோடுற்றோமே யாமோம்" என்பதும் பல பெரியார்களின் வாக்கில் வருவதாம்.

திருப்பாவை யிரண்டாம் பாட்டில் *தீக்குறளை சென்றோதோம்* என்ற விடத்தில் பிரபலமான (அல்லது) பிரளயமான விசாரங்கள் (மூன்று நான்கு வருடங்களுக்கு முன்பு உலகம் முழுவதுமறிய நடந்திருந்தும் இன்னமும் 'தீக்குறளைச் சென்றோதோம்' என்று அழுத்தம் திருத்தமாக ஓதுமவர்களே மலிந்துள்ளார்கள்.

இதைவிட ஆச்சரியமான விஷயமொன்று தெரிவிக்கிறேன். திருப்பாவை முதற்பாட்டில் *ஏரார்ந்த கண்ணியசோதை* என்றவிடத்தில் ஒரு ஸ்வாமி "ஏரார்ந்த கண்ணீர் அசோதை" என்றே ஸேவிப்பது வழக்கம். அவர் ஒரு ஸமயம் அடியேனுடைய திருப்பாவையுபந்யாஸ ப்ராரம்பத்திற்கு வந்திருந்து முதற்பாட்டின் ப்ரவசனத்தைப் பூர்த்தியாகக் கேட்டார். மறுநாள் பின் மாலை அவ்விடத்திலேயே பெருமாள் ஸந்நிதியில் தனுர்மாஸத் திருவாராதனத்தில் திருப்பாவை ஸேவிக்கின்ற

அவர் 'ஏரார்ந்த கண்ணீர்' என்று முழுமேம் இழுத்தார். அடியேன் என்ன சொல்லுவது? ஒன்றுஞ்சொல்லவில்லை. *எங்ஙனே சொல்லிலுமின்பம் பயக்குமே* என்ற ஆழ்வார் பாசுரம் இதற்காகவே அவதரித்ததுபோலுமென நினைத்தேன்* *நாயகனுய் பாசுரத்தில் *ஆயர் சிறுமியரோமுக்கு* என்றவிடத்தில் 'ஆயர் சிறுமையரோம் உமக்கு' என்று ஸேவிப்பவர்கள் இன்னமும் எத்தனை பேருளர் தெரியுமோ?

ஸந்த்யாவந்தன மந்த்ரம் தர்ப்பண மந்த்ரம் ஸஹஸ்ரநாமம் முதலானவற்றில் பால்ய பாடமாக எத்தனையோ அபத்தங்கள் பெரியார் வாக்கிலும் அபரிஹார்யமாயிருப்பது காணுகின்றோம். ஆகிலும் ஒன்று கேண்மின். ஸாயம்ஸந்த்யோபஸ்தான மந்த்ரத்தில் *உருசக்ம்ஸ மா ந ஆயு: ப்ரமோஷீ:* என்றுளதன்றே. இங்கு (உருசக்ம்ஸ, மா, ந:) என்று பதவிபாகம். உபாத்யாயர்கள் (உருசம்—ஸமாந:) என்று பிரித்துச் சொல்லி வைக்கிறார்கள். பிறகு ஸம்ஹிதா பதக்ரமங்கள் ஓதினாலுங்கூட இந்த பால்ய க்ருஹீத பாடம் தொலைவதில்லை. நிற்போமிப்போது. ... ...

# பெரியாரின் பரமபத ப்ராப்தி

திருவரங்கம் பெரிய கோயில் ஸ்தலாசார்ய புருஷர்களில் ஒருவராய் ப்ரசண்ட பண்டிதோத்தமரென்று ப்ரஸித்தரா யெழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. எம்பார் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி திருநாடலங்கரித்து இருபத்தைந்து ஆண்டுகளானாலும் ஸ்ரீவைஷ்ணவ பண்டிதவுலகம் அந்த ஸ்வாமியை மறந்திராது. அந்த ஸ்வாமியின் பெருமைகளை ஸ்ரீராமாநுஜனும் பன்முறை அநுபவித்திருக்கக் கண்டிருக்கிறீர்கள். அவருடைய மூத்த திருக்குமாரர் ஸ்ரீமதுபயவே. எம்பார் (ஸம்பத் ஸ்வாமியென்று ப்ரஸித்தராயிருந்த) ராமாநுஜாசாரியர் ஸ்வாமி நேற்று ஆவணிமீ சுக்லத்விதீயா திதியில் (25—8—68) பெங்களூர் நகரத்தில் தம்முடைய எண்பதாவது திரு நக்ஷத்திரத்தில் திருநாட்டுக்கெழுந்தருளினார். இந்த ஸ்வாமி திருத்தகப்பனார் ஸன்னிதியிலேயே ஸாமான்ய விசேஷ சாஸ்த்ரங்களையதிகரித்துச் சிறந்த வாக்மியாய் ப்ரவசனப்ரவீணராயெழுந்தருளியிருந்தவர். சிஷ்யர்களின் பிரார்த்தனைக்கிணங்கிச் சிலபல ஸம்வத்ஸரங்களாக பெங்களூரில் எழுந்தருளியிருந்து ஸம்ப்ரதாயக்ரந்த ப்ரவசனங்கள் செய்துகொண்டிருந்தார். இங்கு அடியேனுடைய ஒரு நிர்வேதத்தை விஜ்ஞாபிக்கிறேன். கீழ் ஸஞ்சிகைகளில் எழுபத்தேழு பெரியார்களின் பெருமையென்று மகுடமிட்டு வைகுண்டவாஸிகளும் அடியேனுக்கு ஆப்தர்களுமான பெரியார்களின் பெருமையை வெளியிட்டு முடித்தேன். இனி ஜீவித்திருக்கும் பெரியார்களின் பெருமையை எழுதிவரவேணுமென்று மனோரதித்து ஜ்ஞானசீலவயோவ்ருத்தரான இந்த ஸ்வாமியைப்பற்றி முந்துறமுன்னம் எழுதவேணுமென்று எண்ணியிருக்கையில் இந்த ஸ்வாமியும் வைகுண்டவாஸியாக ஆய்விட்டாரந்தோ! இவருடைய திருக்குமாரர் எம்பார் ஸ்ரீநிவாஸாசாரியரென்பவர் விவேகியாய் மேதாவியாய் விளங்கி வருகிறார். நீடூழிவாழ்க. ... ...

# திவ்யப்ரபந்த பரீக்ஷைகள்

எந்த கலையிலும் ஆழ்ந்து பரிச்ரமப்பட்டவர்களே பரீக்ஷைக்கு ஸஜ்ஜராயிருப்பர்கள். பள்ளிக்கூடங்களில் நடைபெறும் பரீக்ஷைகளுக்கு 100-க்கு 40 வாங்கினால் போதும், 32 வாங்கினாலும் போதும், 25 வாங்கினாலும் போதும் என்பதாகக் கேள்விப்படுகிறேன். வாசோவிதேயமாக வைத்துக்கொள்ளவேண்டிய வித்யைகளில் நூறுக்கு நூறு வாங்கினால்தான் பரீக்ஷை தேர்ந்ததாகப் பாவிக்கப்படும். நூறுக்கு இருநூறும் வாங்கவேண்டும். அத்யாத்ம வித்யைகளில் பரீக்ஷை கொடுத்துத் தேறுவது உத்யோக லாபார்த்தமாகவன்று; கேவலம் ஆத்மத்ருப்திக்காகவத்தனை. ஸ்ரீபாஷ்ய பங்க்திகளைக் கண்ட பாடஞ்செய்து பரீக்ஷை கொடுப்பவர்களுமிருக்கிறார்கள். விஜய நகர ஸமீபத்தில் பரவஸ்து கோவிந்த ஸ்வாமியென்பவர் நாற்பது வருஷமாக அடியேனுக்குப் பரிசிதர். இவர் 35 ஆண்டுகட்கு முன்பு இவ்விடம் வந்திருந்தபோது ஸ்ரீபாஷ்யம் முதலத்யாயம் முழுவதும் கண்டபாடமாக்கியிருந்தார். இவர் இற்றைக்கும் ஜீவித்திருக்கிறார். ஸ்ரீகூர்மம் ஸமீபத்தில் இருந்த வருகிறார். மிகவும் மூப்படைந்திருந்தாலும் இப்போதும் பரீக்ஷைக்கு உரிய உபஸ்திதி கொண்டிருக்கிறாரென்று அடிக்கடி கேள்விப்பட்டு வருகிறேன். அவருடைய திருத்தகப்பனார் ஸ்ரீபாஷ்யம் முழுவதையும் கண்டபாடமாக்கியிருந்தாரென்று கேட்டிருக்கிறேன்.

இக்காலத்தில் நமது ப்ராந்தங்களில் வேதத்தையும் திவ்ய ப்ரபந்தத்தையும் கண்டபாடமாக்கி வருவது காண்கிறோம். வேதபரீக்ஷையில் மிகக் கடினமான ப்ரக்ரியைகள் உண்டு. ஸ்ரீராமாநுஜன் (214ல்) வித்யாபரிச்ரம பரீக்ஷையென்னும் கட்டுரையில் அதைப்பற்றிச் சிறிது ப்ரஸ்தாவம் செய்திருக்கிறேன். இப்போதும் அதில் வேறு சில ப்ரகாரங்களைக் காட்டுகிறேன். ஒரு கனபாடி புதுக்கோட்டை ஸதஸ்ஸில் ஸம்ஹிதை பதம் க்ரமம் இவை பரீக்ஷை கொடுத்துத் தேறினார். அவரே அடுத்த வருஷத்தில் ஜடையும் கனமும் பரீக்ஷை கொடுக்கச் சென்றார். முன்பிருந்த பரீக்ஷகரே அப்போதுமிருந்தார். அவரெதிரில் இவர் உட்கார்ந்து 'ஜடையும் கனமும் பரீக்ஷிக்கலாம்' என்றார். அந்த பரீக்ஷகர் இவரை நோக்கி 'ஸம்ஹிதா பதம் க்ரமம் ஆசா சொல்லு' என்றார். இப்படி அவர் கேட்க ப்ரஸக்தியில்லை; ஏற்கெனவே அவர் தாமே இவற்றில் பரீக்ஷை செய்து அங்கீகரித்தவராதலால். பரீக்ஷைக்குச் சென்றவர் மஹா சூரராகையால் "இது ஸாதாரணமான கேள்வியன்று; வேதத்திலேயே பரீக்ஷை செய்யத் தொடங்கிவிட்டார்" என்று தெரிந்துகொண்டார்; ஸம்ஹிதா பதம் க்ரமம் ஆசா என்பது நான்கு பஞ்சாதிகளின் அடியென்றும் தெரிந்துகொண்டார். *ஸம்ஹிதாஸி விச்வரூபீ:* என்பது முதல் காண்டத்தில் ஒருபஞ்சாதியடி. *பதம் ஸதா பச்யந்தி ஸூரய:* என்பதும், *க்ரமோஸி சத்ருபதோ ஹந்தா* என்பதும் *ஆ ச புஷ்கரம்* என்பதும் நாலாங்காண்டத்திலுள்ள பஞ்சாதியடிகள். ஆக இப்பஞ்சாதிகளுக்கு ஜடையும் கனமும் சொல்லும்படி பரீக்ஷிக்கிறாரென்று தெரிந்துகொண்டு உடனே தட்டுத்தடங்கலில்லாமல் சொல்லி உத்தம ஸன்மானம் வாங்கினார். வேதமோதினவர்களே அறியவும் ரஸிக்கவுங்கூடிய பரீக்ஷா க்ரமங்கள் இப்படிப்பட்டவை பலபலவுள்ளன. வேதலக்ஷணஜ்ஞர்கள் (அதே) சொல்லு, (அவே) சொல்லு என்பர்கள். பரீக்ஷிதர்கள் உடனே (ததாதே) (மநவே) என்ன வேணும். இக்கேள்விகளில் (தே) என்னாமல் (அதே) என்பானேன்? என்னில், தே என்றால் (தத்தே) என்கிற பதத்தைச் சொல்லிவிடுவனும்; (வே) என்றால் (தநுவே) என்கிற பதத்தைச் சொல்லிவிடுவனும். (த்ரா) எங்கே? (த்ரா:) எங்கே என்று கேட்பர்கள். அந்த பரீக்ஷாக்ரமங்கள் வைதிககோஷ்டியில் பரமவிலக்ஷணமாயிருக்கும்.

நாலாயிர திவ்ய ப்ரபந்தத்திலும் இப்படிப்பட்ட பரீக்ஷாக்ரமங்களுண்டு. பாசுரத்தினடியைச் சொல்லி 'இப்பாசுரத்தைப் பூர்த்தியாகச் சொல்' என்றால் ஆலோசியாமல் ஆகாசம் பாராமல் ஆரம்பித்து பல பாசுரங்களிலே பாய்ந்து செல்லாமல் தடங்கலின்றிச் சொல்லி முடிப்பவர்களைப் பரீக்ஷையில் தேறினவர்களாகச் சொல்லுகிறார்கள், சொல்லுகிறோம். உண்மையில் இவ்வண்ணமாகத் தேறினாலுங்கூட "வல்லரேனவல்லவர்" என்று திருமங்கையாழ்வார் அருளிச்செய்தபடி வல்லரென்னலாம் அவர்களை. வேதத்திற் போலவே திவ்யப்ரபந்தத்திலும் அற்புதமான பரீக்ஷாக்ரமங்கள் பல பல வைத்துக் காட்டுகிறேனிங்கு. கூடவே விடை கூறும் வழிகளையும் விளக்கிக் காட்டுகிறேன். இதை மார்க்க ப்ரதர்சனமாகக் கொண்டு அவரவர்கள் இன்னமும் விலக்ஷணமான பரீக்ஷாப்ரணாளிகளை அமைக்க வேணும்.

[பரீக்ஷை] 1. படுத்தார் 2. தடுத்தார் 3. கொடுத்தார் 4. எடுத்தார் 5. விடுத்தார் 6. அடித்தார். 7. இடித்தார். 8. முடித்தார். 9. துடித்தார் 10. நடித்தார்.

இக்காரியங்களெல்லாம் எம்பெருமான் செய்தவையாகப் பாசுரங்களைக்கொண்டே எடுத்துக்காட்டவேணும். (மேல் வரும் எல்லாக் கேள்விகளுக்கும் பாசுரங் கொண்டே விடை கூறவேணும்.)

[விடை] 1. அரவணைமேல் படுத்தார். 2. பெருமழையைத் தடுத்தார். 3. (நமக்கு) ஆக்கை கொடுத்தார். 4. (குடக்கூத்தாடக்) குடங்களையெடுத்தார். 5. அரக்கியின் மூக்கை விடுத்தார். 6. தண்டாலடித்தார். 7. மாடமிடித்தார். 8. கவராக முடித்தார் 9. துள்ளித்துடித்தார் 10. அரவில் நடித்தார்.

இவற்றுக்குப் பாசுரங்கள்:- 1. அராவணைப் படுத்தபாயல் பள்ளிகொள்வது. (திருச்சந்த விருத்தம்.) 2. *கடுத்தார்த்தெழுந்த பெருமழையைக் கல்லொன்றேந்தி யினநிரைக்காத் தடுத்தான* (பெரிய திருமொழி.) 3. *ஆக்கை கொடுத்தளித்த கோனே குணப்பரனே* (நான்முகன் திருவந்தாதி) 4. குடங்களெடுத்தேறவிட்டு.* (பெரியாழ்வார் திருமொழி.) 5. *அவள் மூக்கு அயில் வாளால் விடுத்தான்* (பெரிய திருமொழி) 6. *அருளென்னுந் தண்டாலடித்து* (பெரிய திருவந்தாதி.) 7. *இலங்கைக்குமா நெடுமாடமிடித்தபிரானார்* (திருவிருத்தம்) 8. *கவராக முடித்து* (பெரிய திருமொழி.) 9. *சோப்பூண்டு துள்ளித் துடிக்கத்துடிக்க* (பெரியாழ்வார்) 10. *குதிகொண்டரவில் நடித்தாய்* (நாச்சியார்).

விடை கூறும்போது அவரவர்களுக்குத் தோன்றின பொருத்தமான வேறு பாசுரங்களையும் சொல்லலாம். பரீக்ஷை செய்யும்போது (படுத்) (தடுத்) (கொடுத்) (எடுத்) (விடுத்) ......என்றிவ்வளவே சொல்லவேண்டும். இப்படிச் சொன்னால் ஒன்றுக்குப் பல பாசுரங்கள் கூறப் பாங்காகும். இதுதான் வேதபரீக்ஷாப்ரக்ரியை.

2. [பரீக்ஷை] படைத்து புடைத்து அடைத்து மிடைத்து துடைத்து.

[விடை] நளிர்நீர் கடலைப் படைத்து. *புடைத்திடுதிகளாதே] *கடலையடைத்தரக்கர் குலங்களை *மிடைத்திட்டெழுந்த *துடைத்திட்டவுரைத்தனக்காக்க,

3. [பரீக்ஷை] ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து ஆறு ஏழு எட்டு ஒன்பது பத்து நூறு ஆயிரம் கோடி—கிடுகிடுவென்று பாசுரங்கள் சொல்லு.

[விடை] *ஒன்றெனப் பலவென* இரண்டு கூறு செய்துகந்த சிங்கமென்ப தின்னையே.* மூன்றெழுத்ததனை மூன்றெழுத்ததனால்.* புனற்கணின்ற நான்குமாய்* *ஐந்துமைந்துமைந்துமாய்* ஆறினோடொரு நான்குடை நெடுமுடி.* ஏழுமாமரம் துளைபடச் சிலை வளைத்து. *எட்டுமெட்டுமெட்டுமாய்* ஏழினோடோரொன்பதாய்* பத்துடையடியவர்க்கு* இனநூறுபிணம்* ஆயிரம் பைந்தலைய* பல கோடி நூறாயிரம்.

4. [பரீக்ஷை] ஒருவன் இருவர் மூவர் நால்வர் ஐவர் அறுவர் எழுவர் எண்மர் பதின்மர். பதினொருவர் பன்னிருவர் நூற்றுவர் ஆயிரவர்......ஆலோசியாமல் சொல்லு.

[விடை] *ஒண் சங்கதை வாளாழியானொருவன்.* இருவரவர் முதலுந்தானே.* *மூவராகியவொருவனை.* ஆலநிழற்கீழறநெறியை நால்வர்க்கு* அடவரும் படைமங்க ஐவர்கட்காகி* மக்களறுவரைக் கல்லிடைமோத.* பொருள்கையுண்டாய்ச் செல்லக் காணில் போற்றியென்றேற்றெழுவர்* எண்மர் பதினொருவர்* ஈரைம் பதின்மர் தாள்சாய* எண்மர் பதினொருவர்* ஈரறுவர்* நூற்றுவரும் பட்டழிய* பதினாறுமாயிரவர்*

5. [பரீக்ஷை] ஞாயிறு திங்கள் செவ்வாய புதன் வியாழன் வெள்ளி—சொல்லு பாட்டுக்களை.

[விடை] *எல்லையில் சீரிள ஞாயிறு* திங்கள் சேர்மாடத்திருப்புளிங்குடி* *செவ்வாய்க்கிளி நான்மறைபாடு* புதமிகு விசும்பில்* வியாழமுறங்கிற்று* வெள்ளி யெழுந்து. [சனியும் கண்டுபிடித்துச் சொல்லுவேன்.]

6. [பரீக்ஷை] ஐயா கையா பொய்யா மையா செய்யா வையா நெய்யா எய்யா—சொல்லு கிடுகிடுவென்று பாசுரங்களை.

[விடை] *ஐயாவுன்னையறிந்துகொண்டேன்* சுரிசங்க மேந்தும் கையா* *பொய்யாவுன்னைப் புறம்பல பேசுவ* மையார்கண்மடவாய்ச்சியர்* செய்யாரார்விரை கிருதி* வையார் சுடராழி* நெய்யாராழியுஞ் சங்கமும்* நின்கழல் எய்யாதேத்த*

7. [பரீக்ஷை] சரண் சுருண் திரண் அரண் இரண் இருண் மரண் மருண் கரண் புரண்—தாமதியாமல் சொல்லுவாயா?

[விடை] *கண்ணனல்லாலில்லை கண்டீர் சரண்* சுருண்டிருண்ட குழல்தாழ்ந்த முகத்தான்* திரண்டெழுதழை மழை* இல்லை கண்டீரரணே* இரண்டும் போயிரண்டின் வீடு.* இருண்ட குழல்* மரணமுமன்னுயிர்கட்கெல்லாம்* மருண்டுமான் கணங்கள்* *கரண்டமாடு பொய்கையுள்* புரண்டு வீழவாளைபாய்*

8. [பரீக்ஷை] கோன் தேன் கூன் வான் தான் மான் ஆன்—இவையெல்லாம் எம்பெருமானைப்பற்றியே சொல்லவேண்டும். சொல்லு பாசுரங்களை.

[விடை] *கோனே குறுங்குடியுள் குமரா* அடியவர் தங்களுள்ளத்தூறிய தேன்* கூனுயதோர் கொற்றவில்லொன்று கையேந்தி* வானே மாநிலமே* தானுய வெம்பெருமான்* அம் மானுழிப்பிரான்* ஆனுயனுனே*

9. [பரீக்ஷை] உண்டான் கண்டான் எண்டான் விண்டான் கொண்டான் மண்டான் பண்டான்—சொல்லு பாசுரங்களை.

[விடை] *மாமலர் மங்கை மணநோக்க முண்டான்.* (உண்டானேழ்வையம்*) *நால் வேதம் கண்டானே* ஒரெண்டானுமின்றியே.* விண்டான் விண்புக.* கோயில் கொண்டான்* மண்டான் சோர்ந்ததுண்டேலும்* பண்டானுய்யவோர்.

10. [பரீக்ஷை] ஆசார்ய கோஷ்டியில் திருக்கச்சிநம்பி யாறுவார்த்தை ப்ரஸித்தமாகத் தெரியும்: ஆழ்வார்கள் கோஷ்டியில் ஆறுவார்த்தை தெரியுமா?

[விடை] தெரியும்; சொல்லுகேன் கேட்டருளாய். 1. வதுவைவார்த்தை. 2. நெய்யுண்வார்த்தை. 3. வெண்ணெய்வார்த்தை. 4. நடந்த நல்வார்த்தை. 5. மெய்ம்மைப் பெருவார்த்தை. 6. தொலைத்தவார்த்தை. (இவற்றுக்குப் பாசுரங்கள்) *வதுவைவார்த்தையுளேறு பாய்ந்ததும்* நெய்யுண்வார்த்தையுளன்னை கோல்கொள்ள* ஆய்ச்சியாகியவன்னையாலன்று வெண்ணெய்வார்த்தையுள்.* சேனையை நாசஞ் செய்திட்டு நடந்த நல்வார்த்தை.* செம்மையுடைய திருவரங்கர் தாம் பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை.* *வன்குடிமடங்கவாளமர் தொலைத்தவார்த்தை.*

11. [பரீக்ஷை] இந்த ஆறு வார்த்தைகள்தானு? வேறொரு வார்த்தையுமில்லையா?

[விடை] *கஞ்சன் கறுக்கொண்டு நின்மேல் கருநிறச் செம்மயிர்ப்பேயை வஞ்சிப்பதற்கு விடுத்தானென்பதோர் வார்த்தையுமுண்டு* என்று பெரியாழ்வார் ஸாதிக்கிருர்: ஆனுல் அது எம்பெருமானைப்பற்றிய வார்த்தையன்று. திருப்பாவை சாத்து முறையில் *அங்கப்பறைகொண்ட வார்த்தை* என்றும், உபதேசரத்தின மாலையில் *முன்னோர் மொழிந்த பாசுரத்தில்* இது சுத்தவுபதேசபர வார்த்தை* என்றும் சேவிப்பார் பலருளர். அப்படிப்பட்ட அபத்த வார்த்தைகள் பலவுமுண்டு. நானறியேன்

11. [பரீக்ஷை] இரும்பு, செப்பு, வெள்ளி, வெண்கலம், பொன், தங்கம்— இவற்றைக்கொண்ட பாட்டடி சொல்லவேணும்.

[விடை] *இரும்பு அனன்றுண்ட நீர்* செப்போது மென்முலை* வெள்ளியார் பிண்டியார் போதியார்* வெண்கலப் பத்திரம் *பொன்போல் மஞ்சன மாட்டி.* தங்கத்தானு மேலும்தங்கு.

12. [பரீக்ஷை] இந்த வார்த்தையைக் கேள்; இதிலுள்ள ஒவ்வொரு சொல்லுக்கும் பாசுரம் பாட்டடியாகவே எடுத்துச் சொல்லவேணும். "கண்ணு! என்னை இசைவித்து எனக்கு உன்னுடைய திருவடியைக் காட்டி அருளாது மண்ணில் தள்ளி வேதனை செய்கின்றவாறு என்கொல் சொல்லு=இப்பதங்களைக்கொண்ட பாட்டடிகள் சொல்லுவாயாக.

[விடை] *கண்ணா நான்முகனைப் படைத்தானே* என்னை வருகவென* இசை வித்தென்னையுன் தாளிணைக்கீழ்* எனக்கு நல்லரணை* உன்னுடைய விக்கிரமம்* திருவடியை நாரணனை* காட்டி நீ கரந்துமிழும்* அருளாதொழிவாய்* மண்ணில் பிறந்து மண்ணாகும்* தள்ளித் தளர் நடையிட்டு* வேதனை வெண்புரி நூலனை* செய்கின்ற கிதியெல்லாம்* ஆறுசடைக்கரந்தான்* என்செய்யுமூரவர் கவ்வை.* கொல்லையென்பர் கொலோ* சொல்லுவன் சொற்பொருள்.* ஸ்வாமிந்! த்ருப்திதானு?

13. [பரீக்ஷை] தோட்டம் கிணறு வீடு வாசல் முற்றம் இடைகழி புழைக் கடை கூடம் மாடம் மாளிகை படி தூண் கம்பம் சுவர் கதவு தாம்பு அரங்கு உரல் உலக்கை குடை செருப்பு துணி சிற்றாடை. கூறை, சூடை, ஆடை — இவற்றுக்குப் பாசுரங்கள் சொல்லு பார்ப்போம்.

[விடை] *தோட்டமில்லவள்* *கிணறுமிவையெல்லாம்* உம்முயிர்வீடுடையான்* *நெறிவாசல் தானேயாய்* முற்றம் புகுந்து முறுவல் *கோவலிடைகழியேபற்றி* உங்கள் புழைக்கடை* கூடந்தோறும் *மாட மாளிகை சூழ்* படியிடை மாடத்து* இரணியன் தூண்புடைப்ப* கம்பமாகளிறஞ்சி* சுவரார் கதவின்புறமே.* கதவுமனமென்றும்* *தாம்பேகொண்டார்த்ததழும்பு* அரங்கின் மல்லரைக்கொன்று* எத்திறமுரலினோடு* *உழுவதோர் படையுமுலக்கையும்* கொற்றக் குடையாக ஏந்தி நின்ற* செருப்புங் கொடாதே* துணிமுன்புநால* செய்ய நூலின் சிற்றாடை* கூறையுடுக்குமயர்க்கும்* *தொடையொத்த துளபமுங்கூடையும் பொலிந்து* ஆடையுடுப்போம்*

14 [பரீக்ஷை] கடல் குளம் ஏரி ஆறு கழனி சோலை பாலை — இவற்றுக்குப் பாசுரங்கள் சொல்லு.

[விடை] *கடல்கொண்டெழுந்தது வானம்* திருவெள்ளக் குளத்துளண்ணா* *கோனேரிவாழுங்குருகு* ஆறெனக்குநின்பாதமே* குளனார் கழனிசூழ்* திருமாலிருஞ் சோலை* சுவைத்தமிழ்பாலை*

15. [பரீக்ஷை] மரம் செடி கொடி வேர் நார் பூ காய் கனி பழம் தண்டு தாது தளிர் மாலை — இவற்றுக்குப் பாசுரங்கள் சொல்லு பார்ப்போம்.

[விடை] *சேண்சினையோங்கு மரம் செடியாயவல்வினைகள்* கொடியார் மாடக் கோளூர்* வேர்முதல்மாய்த்து* நாராரின்னடை நாண்மலர்* பூம்புனல் காவிரி* காயோடு நீடு* கனிசேர்ந்திலங்கு* தயிர்ப்பழஞ்சோற்றொடு* தண்டொடு சக்கரம்* தாதிலகு பூத்தெளித்தால்* தளிர்புரையுந்திருவடி* சூட்டு நன்மாலை.*

16. [பரீக்ஷை] ஈ எறும்பு கிரிமி நாய் நரி கழுதை யானை சிங்கம் குரங்கு வேங்கை ஆளி — இவற்றுக்குப் பாசுரங்கள் சொல்லு.

[விடை] *ஈயிலைரிப்புண்டு மயங்கி* நெய்க்குடத்தைப்பற்றியேறுமெறும்புகள் போல்* மெல்லியலாக்கைக் கிரிமி* நாயேன் நாய் கூழைவாலால்* அரிகாண் நரியாய்* *காய்சினத்தகழுதும் கதமாக்கழுதையும்* ஆருமத யானை* சிங்காமதாயவுணன்.* *குரங்குகள் மலையை தூக்க* கொலைவாய்ச்சின வேங்கைகள்* ஆளியுங்கோளரியும்*

17. [பரீக்ஷை] அன்னம் கொக்கு குருகு குயில் மயில் கிளி புறா குருவி கோழி காக்கை செம்போத்து பல்லி தேள் பாம்பு நண்டு வண்டு நாரை முயல்—சொல்லுவையா?

[விடை] *மென்னடையன்னம்* *கொக்கினங்காள் குருகினங்காள்* கோனேரி வாழுங்குருகாய்* குயிலாலும் வளர்பொழில் சூழ்* கணமாமயில்காள்* மென்கிளிபோல் மிகமிழற்றும்* பவளக்கொழுங்காலபைங்கால் புறவம்* கரிய குருவிக்கணங்கள்* கோழி கூவென்னுமால்* கரையாய் காக்கைப் பிள்ளாய் *திருத்தாய் செம்போத்தே* பல்லியின் சொல்லும் சொல்லா* விடத்தேளெறிந்தாலேபோல* பாம்போடொரு கூரையிலே* *நண்டையுண்டுநாரை பேர* வண்டுகளோவம்மின்* கூர்வாய்நாரை *ஏரார் முயல்விட்டு*

18. [பரீக்ஷை] இப்புதிய கேள்விகளைக்கேள். இரந்து இறந்து, துரந்து துறந்து, பரந்து பறந்து, கரந்து கறந்து, நிரந்து நிறைந்து,—கரை கறை, குரை குறை, நிரை நிறை, இரை இறை, உரை உறை, திரை திறை, சொரி சொறி, பொரி பொறி, குரு குறு, செரு செறு, மரு மறு, பொரு பொறு, தரு தறு, கரி கறி, அரி அறி, வேராக வேறாக, நீரா நீறா, பேரா பேறா, சீரா சீறா, மாரன் மாறன்* மாரி மாறி—இந்த வாசிகளைக்கண்டு கிடுகிடுவென்று பாசுரங்கள் சொல்லுவாயா?

[விடை] *இரந்துரைப்பதுண்டுவாழி — கண்டுகோளிறந்துநின்ற பெருமாயா* சரங்களைத் துரந்து—துறந்தெம்மைவிட்டவை* *பரந்து பொன்னிரந்துநுந்தி—*பறந்தோடி* கரந்தெங்கும் பரந்துளன்—பாலைக்கறந்தடுப்பேற* ஏறு மெறும்புகள்போல் நிரந்து—நீங்காத செல்வம் நிறைந்து*=*கரையெடுத்த சுரிசங்கம்—கறையணிமூக்குடை* குரைகடல் கடைந்த—யானேர்குறைவிலனே* ஆநிரைமேய்க்க—நிறைபுக ழேத்தியும்* அன்னமிரைதேர்—இறையுன்னுமினீரே* உரைகொள் இன் மொழியாள்—உறைமார்பா* திரைகொள் பௌவத்து—உய்ம்மின் திறைகொணர்ந்து* *பிளிறிச்சொரிய—சென்றணுர் சொறிய* பொரி முகந்தட்ட—சக்கரத்தின் கோயிற் பொறியாலே* குருவில் மிளிர்தந்து—குறுந்தடி நெடுங்கடல் *சென்று செருச்செய்யும்—பள்ளச் செறுவில்* மருவுந்தமனகமும்—திருமறுமார்பன்* பொருமாநீள்படை—பொறுக்கொணு* தருதுயரம்—தறுகண்வேழம் மறுக* கலையுங்கரியும்—கறியுங்கலத்த தரிசியும்* அரியுருவாகி—அறிகிற்பன்.* வேராகவே விளையும் வீடு—வேறாக வேத்தியிருப் பாரை* நீராயுருகும்—வேறானர் நீறாக.* பேராப்பிதற்றா—பேறாகக்கொள்வனே* சீரால சோதை—சீறுவெறியும்* மாரனார்வரி வெஞ்சிலை—மாறனில் மிக்குமோர் தேவுமுளதே* அருள்மாரியரட்டமுக்கி—மாறி மாறிப்பல*

19. [பரீக்ஷை] நெல் அரிசி உப்பு புளி காரம் மதுரம் பருப்பு நெருப்பு அடுப்பு அவரை துவரை எள் கொள்ளு சோறு சாறு குழம்பு கூழ் கூட்டு நெய் பால் தயிர் நீர் மோர் உண்டுகளித்தேன்=கிடுகிடுவென்று பாசுரங்கள் சொல்லு.

[விடை] *வரம்புற்ற கதிர்ச் செந்நெல்* கலத்ததரிசியும்* மூழையுப்பறியாத தென்னும்* புண்ணில் புளிப்பெய்தால்* மானுங் காரமனங் கெட* மதுரமாவண்டுபாட* *சிறு பருப்பு* நெருப்பு வேண்டிச்சென்று* பாலைக் கறந்தடுப்பேற* அவரைப்பிராயம்* துவரைப்பிரானுக்கே* காரெள்ளினுண்டை* கொள்ளென்று கிளர்ந்தெழுந்த* நல்லதோர் சோறும்* மதுரக்கொழுஞ்சாறு* தலைக்கணத்துகள் குழம்பு* பைங்கூழ்கள் கூட்டுதிரின்குரைகழல்கள்* நெய்யாராழியும்* பாலோடமுதன்ன* சீரார்தயிர்கள்

தெண்ணீர்ப்பொன்னி* மோரார்குடமுருட்டி* அமுதமுண்டு களித்தேனே.* ஸ்வாமீ ஸரிதானு?

20. (பரீக்ஷை.) குடம் சட்டி பானை அகல் கலசம் கிண்டி கிண்ணம் கடாரம் கடாய் குண்டான்—பாசுரங்களைச் சொல்லு கிடுகிடுவென்று.

(விடை) *வாங்கக் குடம் நிறைக்கும்* சட்டித் தயிரும்* பானையில் பாலைப்பருகி* அகல்கொள் வையமளந்த* கலசத்தை நிறைத்தாப்போல்* மலர்கிண்டியதன்மேல்* பிள்ளை தன்கையில் கிண்ணமேயொக்க* கடாரத்தில் பூரித்து* உலகேழுங்கழியக்கடாய்* அங்குண்டானைக் கண்டாய்ச்சியுரலோடார்க்க*

21 [பரீக்ஷை] அப்பம் அவல் வடாம் தோசை வட சீடை பொரி லட்டு பேணி சிற்றுண்டி எள்ளுண்டை முருக்கு சீயம்.

[விடை] *அப்பங்கலந்த சிற்றுண்டி* *நான் அவலப்பந்தருவன்* அன்னனைய பொற்கு வடாம்* விலங்கல் மேவியவ தோசையுமாய்* திரிகின்றது வட மாருதம்* இலட்டுவத்தோடு சீடை* பொரிமுகந்தட்ட* கன்னலிலட்டுவத்* பேணிச் சீருடை* அப்பங்கலந்த சிற்றுண்டி* காரெள்ளினுண்டை* முருக்கிலங்குகனி *அதனுல் வலிமிக்க சீயம்*

22. [முரண்தொடைக்கேள்விகள்] வாரான் வருவான், தாரான் தருவான், செய்வோம் செய்யோம், ஆவோம் அல்லோம், கூறுவன் கூறேன், கூடுவன் கூடலன், நாடுவன் நாடேன். பாடுவன் பாடேன்.

[விடை] *காகுத்தன்வாரானல்-கைதொழவீதிவருவான்* தாரான் தருமென்று—இன்று விண்ணுலகம் தருவானய்* நாமாட்செய்வோய்—செய்யாதன செய்யோம். *உற்றேமேயாவோம் — யாமுமக்கேதொன்றுமல்லோம்* பல்லாண்டு கூறுவனே—கூறேன் நெஞ்சு தன்னால்* இனிவந்து கூடுவனே—அல்லாரொடுங்கூடலன்* நின்னடியே நாடுவன்—நாடேனுன்னையல்லால். *நின்புகழேபாடுவன்-பாடேன் தொண்டர்தம்மை.*

23. [பரீக்ஷை] ஆடி ஓடி கூடி பாடி சாடி நாடி சூடி வாடி. [இவையெல்லாம் எம்பெருமானுடைய செயல்களாகவே காட்டவேணும்]

[விடை] *ஆடியசைந்து ஆய்மடவாரொடு* காற்றில் கடியனுயோடி* கூடிக் குரவைபிணை* குழலாலிசைபாடி* பாகனைச்சாடிப்புக்கு* நாடி யென்றனுள்ளங்கொண்ட* கார்க்கோடல் பூச்சூடி வருகின்ற* வருகையில் வாடிய பிள்ளைகண்ணன்*

24. [பரீக்ஷை] மேலே குறித்த சந்தைகளை எம்பெருமான் செய்கையாக்கிப் பாசுரங்கள் காட்டினது போல் அவற்றையே பிறருடைய செய்கையாகவைத்துப் பாடின பாசுரங்கள் காட்டு.

[விடை] *ஆடியாடியகங்கரைந்து* ஓடியோடிப் பல பிறப்பும் பிறந்து* கூடிக் கூடியுற்றார்களிருந்து* பாடிப்பாடியோர் பாடையிலிட்டு* *நாடினேன் நாடி நான்* சூடுந்துழாயலங்கல் சூடி நாம்* வாடினேன்வாடி*

(பரீக்ஷையில் ஒரு பெரிய விசேஷம்) வனபர்த்தியில் வேதத்தில் க்ரமபரீக்ஷை நடக்கிறது. பரீக்ஷகர் (யத்வை) என்று ஆரம்பித்தார். பரீக்ஷிதர் (வைஹோதா) என்றார். உடனே பரீக்ஷகர் (வைகாது) என்றார். (தெலுங்கு பாஷையில் காது என்பதற்கு அல்ல என்று அர்த்தமாகையாலே 'வை அல்ல' என்றபடி.) பரீக்ஷிதர் உடனே (வா அநீசாந:) என்றார். வைதிகராகக் குழுமியிருந்த நூறு பேர்களும் ஆச்சரிப்பட்டார்கள். வேத

மோதாதவர்களுக்கு இந்த மருமம் விளங்கவேணுமே, விளக்குகிறேன். மூன்றுங் காண்டத்தில் "யத் வை ஹோதா" என்று ஓர் அநுவாகம் தொடங்குகிறது. ஆறுங் காண்டத்தில் (யத் வா அநீசாந:) என்று ஓர் அநுவாகம் தொடங்குகிறது. இரண்டிடத்திலும் இரண்டாவது பதம் (வை) என்பதுதான். ஆனால் இரண்டாமிடத்தில் மட்டும் வை என்கிற பதம் க்ரமகாலத்தில் (அநீசாந: என்று அச்செழுத்து பரமாயிருக்கையாலே) வா (அநீசாந:) என்றாகிறது. மூந்தின இடத்தில் ஹல்லெழுத்தேயிருப்பதனால் வை வையாகவே நிற்கிறது. பரீக்ஷகர் (யத் வை) என்று மட்டும் சொன்னபடியாலே அது இரண்டிடத்திற்கும் பொதுவாயிருப்பதனால் முதலிடத்தில் பரீக்ஷிப்பதாகக்கொண்ட வித்யார்த்தி (வைஹோதா) என்று மேல் பதத்தைத் தொடுத்தார். (யத் வை) என்ற தொடங்கின பரீக்ஷகர் (வை காது) என்று சொல்லக்கூடாது. ஆனால் சொல்லியிருக்கிறார். அதற்கு அர்த்தமென்னவென்றால் 'நான் பரீக்ஷித்த இந்த இடத்தில் க்ரமகாலத்தில் வை கிடையாது; அது விகாரமடையக்கூடிய இடத்தை நீ சொல்லவேணுமென்று அர்த்தம். பரீக்ஷிதர் மஹா சூரராகையாலே அதைத் தெரிந்துகொண்டு உடனே (க்ஷணமும் ஆலோசியாமல்) *வா அநீசாந:* என்றார். உண்மையில் இது ஆச்சரியமான ப்ரச்னோத்தரங்கள். இதேபோல் திவ்யப்ரபந்தத்தில் பல பரீக்ஷைகள் செய்யலாம். சிறிது கேண்மின்.

25. பாசுரத்தின் அடியில் பரீக்ஷை; கன்றுகள் சொல்லு என்றவாறே (கன்றுகளோடச் செவியில்) என்ற பாசுரத்தைச் சொல்ல நினைத்து (கன்றுகளோட) என்று சொல்லத் தொடங்கும் போதே* பரீக்ஷகர் (ஓ) அல்ல என்பரேல் கன்றுகளில்லம் புகுந்து என்னவேணும். மற்றொன்று கேண்மின். பரீக்ஷகர் (மூவராகிய) என்றவாறே மாணுக்கர் மேலே (ஒருவனை) என்று சொல்லத் தொடங்கினால், பரீக்ஷகர் உயிரெழுத்தன்று என்பரேல் (மூவராகிய மூர்த்தியை) என்ன வேணும். முதலது பெரியதிருமொழிப் பாசுரம். இரண்டாமது திருவாய்மொழிப் பாசுரம்.

இத்தகைய பரீக்ஷைகள் சிலர்க்குப் புதிதாகவோ தலைவேதனையாகவோ தோன்றும். திவ்யப்ரபந்தத்தில் அசைக்கமுடியாத திடமான உபஸ்திதியுள்ளவர்களுக்கும், இத்தகைய பரீக்ஷைகளில் தேறவேணுமென்னும் குதூஹலமுடையார்க்கும் இந்த வகை மிகவும் ரஸிக்கும். ஒரு ஸமயம் திவ்ய ப்ரபந்தத்தில் திடமான உபஸ்திதியுள்ளவொருவரோடு [திருநாமத்தையே விஜ்ஞாபிக்கிறேன்—திருக்கண்ணபுரம் பட்டப்பா ஸ்வாமியோடு] வார்த்தையாடுகையில் உருக எங்கு வருகிறது? உறுக எங்கு வருகிறது? என்று கேட்டார். 'உருகவைத்த குடத்தொடு' உண்டு; 'உறுக, கிடையாது என்றேன். பெரிய திருமடலில் 'பொன்னனையார் பின்னும் திருவுறுக' என்றெடுத்துக்காட்டினார். பரமானந்தமடைந்தேன். இது ஐம்பத்திரண்டு வருடங்களுக்கு முன்பு.

(பரீக்ஷை) கோயில் திருமலை திருமால்கோயில் கோபுரம் தோரணம் மதிள் மண்டபம் வாவி எம்பெருமான் ஆழ்வார் எம்பெருமானார் (அல்லது) உடையவர் மணவாளமாமுனி பல்லாண்டிசைப்ப என்றென்றும் வாழியரோ—இவற்றுக்குப் பாசுரங்கள் சொல்லி முடித்திடு.

(விடை) *கோயிற்பிள்ளாயிங்கே போதராயே* திருமலையதுவே அடைவது திறமே.* திருத்திவந்துலகாண்ட திருமால்கோயில்* கொடியணி நெடுமதிள் கோபுரம்* கொடித்தோன்றுந் தோரணவாசல்* கல்லுயர்ந்த நெடுமதிள்சூழ்* துன்று மணிமண்டபங்கள்* *வாவித் தடஞ்சூழ்* எம்பெருமானென்செய்கேனோ* ஆசைப்பட்டாழ்வார் பலர்* இணங்கு திருச்சக்கரத்தெம்பெருமானார்* உமைக்கன்றேபோல நோக்கமுடையவர்* பள்ளிகொள் மணவாளர்* மாமுனிவேள்வியைக்காத்து* பாண்டேன் வண்டறையுங் குழலார்கள் பல்லாண்டிசைப்ப* என்றென்றும் மெங்கும் மொழிவற* வாழியரோ முழுநீர் முகில் வண்ணன்.* [பரமானந்தம்; இப்போது இவ்வளவு போதும்.

# விஜயவீர ஸம்வாதம்.

(விஜயராகவரும் வீரராகவரும் காவிரிக் கரையில் ஸம்பாஷிக்கிருர்கள்.)

— அடுத்த வியாஸத்தைப் புரிந்து கொள்வதற்கு இது மிகவுதவியாம் —

**விஜய:**—வீராசார் ஸ்வாமிந்! எம்பெருமானுக்கு ஸீதாபிராட்டியைப்போலே நப்பின்னைப் பிராட்டியும் ஒரு தேவிதானே; (ஆமாம்.) ஸீதையை ஸீதா என்பதுபோல, நப்பின்னையை நப்பிந்நா என்னலாமா? என்றொரு ஸந்தேஹம். இதேபோல் மதராஸ் பட்டணத்திற்குப் பெயரான சென்னையை 'செந்நா' என்னலாமா? என்பதும் மற்றொரு ஸந்தேஹம். மற்றும் பல பலவுமுண்டாயினும் இவ்விரண்டைப்பற்றி ஸாதித்தருள.

**வீரா:**—ஸ்வாமிந்! 'ஸீதையை ஸீதா என்பதுபோல' என்று தேவரீர் சொன்னது பிசகு. ஸீதா என்பதுதான் முதலில் ஏற்பட்டது; அது வடசொல். அதைத் தமிழ் விதிப்படி ஸீதையென்கிறோம். ஆகவே 'ஸீதையை ஸீதா என்பதுபோல' என்று தேவரீர் சொல்லியிருக்கக்கூடாது. சீதை மணாளா! என்றும், சீதை வாயமுதமுண்டாய் என்றும் ஆழ்வார்கள் ஸாதிப்பது ஸீதா என்கிற ஆகாராந்தமான சொல் ஸ்வதஸ் ஸித்தமாக இருப்பதனாலே.

**விஜய:**—இது ஸாதித்தது ஸரி; 'நப்பின்னையை நப்பின்னா என்னலாமா? என்று கேட்டேனே, அதற்கொன்றும் ஸாதிக்கவில்லையே.

**வீரா:**—கீழே நான் சொன்னதிலிருந்து இதற்கும் ஸமாதானம் வரவில்லையோ? ஸ்வதஸ் ஸித்தமான சொல் என்றால் அது ஸம்ஸ்க்ருதச் சொல்லாக இருக்கவேணும். அது ஸ்வத: ஆகாராந்தமாகவே யிருக்கவேண்டும். அப்படிப்பட்ட சொல் தமிழில் ஐகாராந்தமாக ஆகும்; பீடா—பீடை; சாகா—சாகை; சிகா—சிகை, நர்மதா—நர்மதை... இவைபோல்வன பலவும் காணலாம். இவ்வண்ணமாகத் தவிர, தமிழில் ஐகாராந்தமான சொற்களெல்லாம் ஸம்ஸ்க்ருதத்தில் ஆகாராந்தமாகும் என்று யார் சொன்னது. மிட்டை கட்டை கூடை மேடை என்கிற தமிழ்ச் சொற்களை மிட்டா கட்டா கூடா மேடா என்று ஸம்ஸ்க்ருதமாக்கினால் வாயினால் சிரிக்கமாட்டார்கள்.

**விஜய:**—வீராசார்ரே! நப்பின்னையை நப்பிந்நா என்னலாமென்கிறீரா? கூடாதென் கிறீரா? அதைச் சொல்லும்.

**வீரா:**—தேவரீர் விவேகமிருந்து கேட்பதாகத் தெரியவில்லையே. நான் சொன்னது உம்முடைய மூளையில் ஏறவில்லைபோலிருக்கிறதே. ஸம்ஸ்க்ருதச் சொல்லைத் தமிழாக்குவதுண்டேயொழிய, தமிழ்ச் சொல்லை ஸம்ஸ்க்ருதமாக்குவதென்பது ஜம்பூத்வீபே கிடையாதுணே. அதைத் தென்னாலிராமன் ஸம்ஸ்க்ருதமென்பர்கள். நப்பின்னா என்று ஸம்ஸ்க்ருதபதம் ஸ்வதஸ் ஸித்தமாக இல்லையே. பின்னை நப்பின்னை என்றுதானே யுள்ளது. இச்சொற்களை வடமொழியில் ஆகாராந்தமாக மாற்றுவது பரிஹாஸ்யமே. சென்னையைச் சென்னா என்னுக்கலாமா? என்று கேட்டீரே, அதுவும் அஸம்பாவிதமே. சென்னபுரீ, சென்னாக்யபுரீ என்னலாமேயொழிய சென்னா என்னக்கூடாது. அப்படியானால் "திருத்தேவனார் தொஹாயாம் மம தங்கா வர்த்ததே" என்றும் சொல்லலாம்.

**விஜய:**—பெண்ணையை பண்ணா என்று சொல்லுவது அபஹாஸ்யமா? பரிஹாஸ்யமா? சொல்லும்.

**வீரா:**—ஓஹோ. "காஞ்சீம் வீக்ஷ்ய ஹநூ நிஜே பளபளாத்காராஞ்சநைஸ் ஸம்ஸ்க்ரியாத்" என்னப்பெற்ற சேட்லூர் ஸ்வாமிக்கு என்னை அண்ணனாக்கிவிட்டீரே, நல்லது, இப்போது ராஹுகாலம். பிறகு சந்திப்போம். ... ... ✻

# பண்ணுதடமும் கோதார்த்தோக்ஷவும்.

இக்கட்டுரைக்கு அவதாரிகையாக இவ்விதழிலேயே கீழ் இரண்டாம் பக்கத்தில் அடியேன் செய்யும் விண்ணப்பமென்ற தலைப்பின்கீழ் சுருக்கமாகவெழுதியுள்ளதை மீண்டு மொருமுறை வாசித்துவிட்டு இக்கட்டுரையை வாசிக்கவேண்டுகிறேன். தேஹளீசஸ் துதியில் "பண்ணுதடேக்ஷு" என்றதைப்பற்றியும், த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவலியில் "கோதார்த்தோக்ஷாவமர்த்த" என்றதைப்பற்றியும் நெடுநாளைக்குமுன்னமே பிறர் வாய்திறக்கவொண்ணாதபடி விசாரமும் விமர்சமும் நிர்ணயமும் முடிந்திருப்பதாக விஜ்ஞாபித்திருக்கிறேன். அப்படி முடிந்திருக்கிற விஷயத்தை ஸாரமாக முன்னம் தெரிவிக்கிறேன்.

## உண்மையானபாடம் புண்யாதடேக்ஷுவேயன்றிப் பண்ணுதடேக்ஷுவன்று

புண்ய நதிகளில் ஒன்றான பிநாகிநீ நதியானது வடநாட்டில் பெருகும்போது உத்தரபிநாகினி யென்றும், தென்னாட்டில் பெருகும்போது தக்ஷிணபிநாகினி யென்றும் வழங்கப்பட்டு வருகின்றது. வடநாட்டில் நெல்லூர் ப்ராந்தத்தில் பெருகுகின்ற இப்புண்ய நதி பிநாகினி யென்றே வழங்கப்படுகிறது. தக்ஷிணபிநாகினியைத் தெரிந்து கொண்டவர்கள்மட்டுமே அதனை உத்தரபிநாகினியென்பார்கள். மற்றையோர்கள் பிநாகினி யென்றே வழங்குவர்கள். அந்த நதியே தெற்கே திருக்கோவலூர் ப்ராந்தத்தில் பெருகுகையில் தக்ஷிணபிநாகினி யென்னப்படுகிறது. தமிழ் நூல்களிலும் உலக வழக்கிலும் பெண்ணை யென்றே பேசப்படுகிறது. பிநாகினி யென்கிற உண்மைப் பெயர் பலர்க்குத் தெரியாதென்றும் சொல்லலாம். பாமரர்களுக்குத் தெரியாதேயொழிய ப்ராஜ்ஞர்களுக்குத் தெரியாமலிராது. சில வைதிக கருமங்களில் [பும்ஸவநஸீமந்தோந்நயநாதிகளில்] நதீநாமாநுஸந்தானம் நியமேந செய்ய வேண்டுமிடத்துப் பிநாகினி யென்றே ஓதிவருகிறார்களென்பதை உணராதாரில்லை. இதனைப் பெண்ணையென்று வழங்குவது கொச்சைவழக்கு. கும்பகோணத்தைக் குடமூக்கு என்பது நேரான தமிழ். இரண்டாந்திருவந்தாதியில் பூதத்தாழ்வார் *குடமூக்கில் கோயிலாக்கொண்டு* என்றருளிச்செய்தார். குடந்தை யென்பது பெரும்பான்மை. இது ஸம்க்ஷேப வ்யவஹாரமேயாகும். ஸம்ஸ்க்ருத ப்ரயோகத்தில் கும்பகோணமென்றுதான் சொல்லியாகவேண்டும். சுருக்குவதானால் கும்பபுரி யென்னலாம். குடந்தாயாம் என்றோ குடந்தாபுர்யாம் என்றோ சொல்லுவாரில்லை. திருநாங்கூரை நாங்கையென்றும், தேரழுந்தூரை அழுந்தையென்றும், திருவயிந்திரபுரத்தை அயிந்தையென்றும், ஸாரக்ஷேத்திரத்தைச் சேறையென்றும், பெருங்குளத்தைக் குளந்தையென்றும், நாக பட்டணத்தை நாகையென்றும் .....இங்ஙனே பலபல வ்யபதேசங்கள் ஏகதேசக்ரஹணமர்யாதையில் தமிழ் வழக்காக நிகழ்ந்துள்ளன. இவ்விடங்களில் நாங்காயாம் - அழுந்தாயாம் - அயிந்தாயாம் - சேராயாம் - குளந்தாயாம் நாகாயாம்......என்று ஸம்ஸ்க்ருதமியற்றுவாரில்லை. இயற்றினால் ஹாஸ்யமேயாகும்.

தமிழ்ப் பெயர்களை ஸம்ஸ்க்ருத நூல்களில் அப்படியே எடுத்தாள்வதென்கிற பத்ததியுண்டு; இது அநவத்யமே. அர்ஜுநனுடைய மாமனார் சித்ரவாஹநனென்பவன்;

அவனுடைய பட்டணம் பாண்டி நாட்டில் மணலூ ரென்பது. மஹாபாரதத்தில் (ஆதி பர்வணி. 63. 81) "ததோ மணலூருபதிகந்யாயாம் சித்ராங்கதாயாம் அர்ஜுந: புத்ரமுத்பாதயாமாஸ பப்ருவாஹநம் நாம." என்றுள்ளது. அனந்தபட்ட க்ருதியான பாரத சம்புவிலும் "மணலூருபுரே" என்று சுலோகமியற்றப்பட்டுள்ளது. இவற்றால் தமிழ்ப்பெயர்களை வடநூல்களில் அப்படியே கையாள்வதுண்டென்பது அறியவெளிதாம். இவ்வண்ணமாகப் பெண்ணை யென்கிற நதிப்பெயரை வடமொழியில் ஆக்கவேணுமானால் 'பெண்ணாநதீ' என்றோ 'பண்ணாநதீ' என்றோ ஆக்கலாமே தவிர 'பண்ணு' என்று ஆகாராந்தபதமாக ப்ரயோகிக்க ஒரு சாஸ்த்ரமும் இடந்தராது. பல திருப்பதிகள் நதிக்கரைகளில் பாடப்பட்டன. திருத்தேவனார் தொகையையும் திருவெள்ளியங்குடியையும் மண்ணியாற்றின் கரையிலுள்ளதாகப் பாடினார் கலியன். (மலைநாட்டுத்) திருவண்வண்டூரைப் பம்பையின் கரையிலுள்ளதாகப் பாடினார் நம்மாழ்வார். பம்பா என்பதே பம்பையென்றானபடியால் 'பம்பாயாம்' என்று தாராளமாகச் சொல்லலாம். மண்ணியாற்றின் பெயரைச் சொல்லவேணுமானால் (மண்ணி நதீ) என்னலாம். திருப்பேர் நகரை (அப்பக்குடத்தான்) *பொன்னித் தென்பாலென்றார் நம்மாழ்வார். பொன்னியென்பது காவேரி. பட்டர் காவேரியைச் சொல்லவேண்டுமிடத்தில் (ஹேமாபகா) (கநகஸரித்) என்றார். நிகமாந்தகுருவும் அதைத் தழுவுகிறார். (பொன்னி நதீ) என்று ஓரிடத்திலும் சொன்னதில்லை. சொன்னால் அதைத் தவறு என்பாரில்லை. அப்படியே (பெண்ணை நதீ) என்றாலும் தவறாகாது. வடமொழியில் ஏகாரமுள்ளதேயன்றித் தென்மொழியிற்போல் எகரம் (குறில்) இல்லாமையால் (பெண்ணை நதீ) என்று சொல்லமுடியாமைபற்றிப் (பண்ணை நதீ) என்னலாம். இதற்கு நிஜநாமமாக ஏற்பட்டது 'பிநாகிநீ' என்பதே தவிர மற்றொன்றன்று. அதையிட்டே சொல்லியிருக்கவேண்டும். ஆழ்வார் திருவாக்கில் வந்ததென்கிற கௌரவத்தையிட்டு, தமிழில் வழங்கும் பெயரைச் சொல்லக்கருதினால் (ஸம்ஸ்க்ருதநெறிக்காக) பகரத்தின்மேலுள்ள எகரத்தையகற்றிப் (பண்ணை நதீ) என்றுதான் சொல்லித்தீரவேண்டும். ஈற்றிலுள்ள ஐகாரத்தைத் தவிர்த்துப் (பண்ண நதீ) என்று ஒருவாறு சொல்லலாம். ஸம்ஸ்க்ருதமாக வைத்துப்பேசுவதற்கு உபபத்திலவலேசமும் கிடைக்காது. பரிஹாஸ்யமுமாகும். *வித்யோதந்வதி வெங்கடேச்வரகவேள ஜாதமான (பண்ணுதட) ப்ரயோகத்தில் அவத்யம் சொல்லுகிறாயா? என்பீர்கள். சாந்தம் பாபம்! சாந்தம் பாபம்!! ஸர்வஜ்ஞரான ஸ்வாமி திருவாக்கில் இந்த அவத்யம் புகுந்ததன்று. ஒருகாலும் புகாது. பெண்ணைக்கு ப்ரதிபிம்பமையுண்டாகும்படியாக (பண்யா) என்றே ஸ்வாமி திருவாக்கு அவதரித்தது. அதையறியாதார் (பண்ணு) என்கிற தவறான பாடத்தைக் கொண்டு புகுத்தினார்.

## லக்ஷண பத்ததி சிக்ஷணம்

விவேகிகள் நன்கு ஆராயவேணுமிங்கு. வடமொழியில் ஆகாராந்தமான பதங்கள் தென்மொழியில் ஐகாரவீற்றதாக மாறுமென்று நன்னூலில் கூறப்பட்டது. "ஆவீறு ஐயும்" என்பது நன்னூற் சூத்திரம். ஸீதா ஶீலா யசோதா பார்யா ஜடா கங்கா யமுநா... இத்தகைய வடசொற்கள் ஆயிரம் உதாரணம். இப்படி, தமிழில் ஐகாரவீற்றதானசொல் வடமொழியில் ஆகாராந்தமாகும் என்று ஒரு விதியிருக்க வேண்டாமா? இருக்குமா? இது ஸம்பாவிதமா? கோடையுத்ஸவத்தை கோடா மஹோத்ஸவமென்பாருண்டோ?

கம்பராமாயணத்தில் *நம்பியைக்காண நங்கைக்கு ஆயிரநயனம் வேண்டும்* என்றுள்ளது. சீதையைக் காண இராமனுக்கு ஆயிரங்கண்கள் வேணுமென்றப்படி. இதை ச்லோகமாக்கும்படி நியமிக்கப்பட்டவொருமாணுக்கன் "ஸஹஸ்ரம் நயநாநி ஸ்யு: நங்காயா நம்பிமீக்ஷிதும்" என்றனுடனே, அனைவரும் முறுவல் பூத்தனர். இதற்குமேல், நங்கையும் பெண்ணையுமொன்றாகுமா? நங்கையென்பது வேறுஞ்சொல். பெண்ணையென்பது ஸம்ஜ்ஞை: இதன் ஸித்தி தனிப்பட்டது என்பர்கள். குடந்தை அயிந்தை இத்யாதிகளும் ஸம்ஜ்ஞையேயாதலால் குடந்தாயாம் அயிந்தாயாம் மாலிருஞ்சோலாயாம் ....இத்யாதிகளும் அநவத்யமாகலாம். வஸ்துத: பெண்ணைக்கு மூலமான பிநாகிநீயென்பது ஈகாரவிர்றதாக இருப்பதால் 'பண்ணீதடே' என்றால் பொருத்தமாகும்.

பெண்ணையென்கிற சொல்லுக்கு நதீவிசேஷம் மட்டும் பொருளன்று; பனைமரமும் பொருள். பெரியதிருமொழியில் *காவார்மடல் பெண்ணையன்றி* என்றும், பெரிய திருமடலில் *பெண்ணைமேல் பின்னுமவ்வென்றில்* என்றுமுள்ள ப்ரயோகங்கள் பனைமரப் பொருளன. பண்ணையென்னுஞ் சொல்லுக்குப் பல பொருள்களுண்டு. இருந்தாலிருக்கட்டுமே யென்பீர்கள். "பண்ணுவ்ருக்ஷ நிஷண்ண பக்ஷிஸங்க:" என்றும் சுலோகமியற்றலாம். அதற்குத் தாலவ்ருக்ஷமென்று பெயரிருப்பதால் அதைத்தான் இடவேணுமென்னில்: இதற்கும் பிநாகிநீ யென்று பெயரிருப்பதால் அதைத்தான் இடவேணுமென்று தெளிய ப்ராப்தம். கிம் பஹுநா? புண்யாதடே என்று ஸ்ரீஸூக்தி யருளிய ஸ்வாமி மீது எவ்விதமான அவத்யமும் ஏறாதென்று தெளிக;

"புண்யா என்கிற பாடந்தான் ஆசிரியர்க்கு விவக்ஷிதமென்பது அந்த தேஹளீச ஸ்துதியிலேயே பதின்மூன்றாவது சுலோகத்திலே ஸுவ்யக்தமாகக் காண்கிறது. "பக்தோப்ரோதஸஹ பாதஸரோஜதஸ் தே மந்தாகிநீ விசலிதா மகரந்ததாரா, ஸத்யஸ் த்ரிவர்க்கமபவர்க்கமபி க்ஷரந்தி புண்யா பபூவ புரசாஸநமௌளிமாலா" என்பது அந்த ச்லோகம். இதில் 'புண்யா பபூவ' என்பதற்கு—பெண்ணையாறாக ஆயிற்று என்பதுதான் பொருள். *ம்ருத்யுஞ்ஜய: க்ருத்திவாஸா: பிநாகீ* என்ற அமரகோசத்தின்படி பரமசிவனுக்குப் பிநாகியென்று பெயர். அவனுடைய ஸம்பந்தத்தையிட்டே நதிக்குப் பிநாகிநியென்று பெயராயிற்று. ஆசிரியர் *புரசாஸந மௌளிமாலா* என்று விசேஷணமிட்டு இதை நிரூபித்தே (புண்யா பபூவ) என்றார். ஆகவே புண்யா என்று அடியேன் சுதந்திரமாகத் திருத்தினதன்றென்பது பிராமாணிகர்களுக்கு உணரவெளிதாம்.

சென்னையில் மயிலாப்பூரை மஹிலாபுரியென்கிறார்கள். *ஒப்பவரில்லா மாதர்கள் வாழும் மாடமாமயிலை* என்ற ஆழ்வார் பாசுரம் மஹிலாபுரியென்பதற்கு வியாக்கியானமாக அமைந்தது. இதைத் தெரிந்துகொள்ளாமல், பெண்ணையை பண்ணு என்றாக்குவது போல மயிலையை மயிலா என்றாக்கி மயிலாபுரீ என்று ஒருவர் ப்ரயோகித்தால் பரிஹாஸ்யரேயாவர். ஸம்ஜ்ஞையான தமிழ்ச் சொல்லை வடமொழியில் அப்படியே ப்ரயோகிக்கலாமென்பதை நிராக்ஷேபமாக வொப்புக்கொள்பவனடியேன். பண்ணாநீ என்றால் வாய்திறக்க முடியுமோ? குடந்தாயாம் என்னமல் குடந்தநகர்யாம் என்றால் மறுப்பாருண்டோ? ஜில்லாயாம் தாலூகாயும் என்று ப்ரயோகித்தால்கூட இவ்வளவு பரிஹாஸ்யதையிராது. ஏனென்றால், ஜில்லா, தாலூகா என்று ஆகாராந்தமாகவே

வழங்குஞ்சொற்களாதலால். அப்படி பண்ணு என்று வழங்குவதில்லையே. பண்ணை யென்கிற சொல்லில் ஆகாரம் எப்படி வந்தது? என்கிற நம் கேள்விக்கு வர்ஷசதமானாலும் விடையிறுக்க முடியாது கிடீர். மேலும் பிராகிரீ என்கிற நிஜமான வடமொழிப் பெயர் இருக்க அதை விடுவதற்கும் காரணம் சொல்லியாகவேண்டும். ஆழ்வார் அந்தச் சொல்லை உகக்கவில்லையென்றால், ஆழ்வார்களுகந்த கோவல் என்ற ஊர்ப் பெயரையும் அப்படியே ஆதரிக்கவேண்டும். ஆழ்வார் அஹீந்த்ரபுரமென்னுமல் அயிந்திரபுரமென்றமையால் அதையும் அப்படியே ஆதரிக்கவேணும்.

என்றைக்கோ முடிந்துபோன இந்த சர்ச்சையை இப்போதாகக் கிளப்பி விடை கூறுவதாக எழுந்த ஸ்ரீ மதுராந்தகம் ஸ்வாமி என்ன உபபத்தியெழுதுகிறாரென்றால் பாரத சம்புவில் மணலூருபுரமென்றிருப்பதால் தமிழிலுள்ளபடியே நாமாநுகரணம் நிரவத்ய மென்கிறார். பாரதசம்புவையும், அதற்கும் மூலமான மஹாபாரதத்தையும் நாமேயன்றோ எடுத்துக்காட்டியிருக்கிறோம். அதில் அநுபபத்திகந்தமுமில்லையே. ஸம்ஸ்க்ருதமார்க்கம் சிதையுவில்லையே. நம்முடைய உபபாதன ஸ்வரூபத்தை மதுராந்தகம் ஸ்வாமி நெஞ்சில் வாங்கிக்கொள்ளமாட்டாமைக்கு சோகித்து நிற்கிறோம். இந்த சோகம் நித்யாநுபாவ்யமே.

# இனி கோதார்த்தோக்ஷ விமர்சம்

தென்மொழியில் பொதுப்பெயர், சிறப்புப்பெயர் என வழங்குமவற்றை ஸாமாந்ய நாமதேயம் விசேஷ நாமதேயம் என வடமொழியாளர் வழங்குவர். மாதர், மங்கை, மடந்தை, மின்னேரிடையாள், காவியங்கண்ணி என்றிப்படிப்பட்ட சொற்கள் தென் மொழியில் பொதுப்பெயர்கள். சீதை, நப்பின்னை, தேவகி என்றிப்படிப்பட்ட சொற்கள் சிறப்புப் பெயர்கள். லலநா, வநிதா, ஸுததீ, ஸுப்ரூ: என்றிப்படிப்பட்ட சொற்கள் வடமொழியில் ஸாமாந்ய நாமதேயங்கள். ஸீதா, அஹல்யா, ருக்மிணீ என்றிப்படிப்பட்ட சொற்கள் விசேஷ நாமங்கள். இத்தகைய விசேஷ நாமதேயங்களையிட்டு வரலாறுகள் சொல்ல வேண்டுமிடத்து, தமிழர்கள் மட்டும் ஸாமாந்ய நாமதேயங்களை [அதாவது பொதுப்பெயர்களை] யிட்டும் சொல்லுவதுண்டு. இராமன் சீதையுடன் புறப்பட்டா னென்று சொல்லவேண்டுமிடத்து 'இராமன் மின்னேரிடையாளுடன் புறப்பட்டான்' 'மன்னவன் கருங்குழலியுடன் புறப்பட்டான்' என்றிப்படிச் சொல்லுவதுண்டு. இங்கு 'மின்னேரிடையாள்' 'கருங்குழலி' என்ற சொற்களானவை பொதுவாக ஸ்த்ரீகளுக்கு வாசகங்களேயொழிய, சீதைக்குச் சிறப்புப் பெயர்களல்ல. வைதேகி, மைதிலி, சானகி என்றிப்படிப்பட்ட சொற்களே சீதைக்குச் சிறப்புப் பெயர்களாகும். வடநூலார் இத்தகைய சிறப்புப் பெயர்ச் சொற்களையிட்டே கவியியற்றுவர்கள். தொடர்ந்து கதை சொல்லிக்கொண்டு போமிடங்களில் இந்த விசாரமில்லை.

ஆழ்வார்களின் திவ்யப் பிரபந்தங்களில் சிறப்புப் பெயர்களையிட்டுக் கூறுவது சிறுபான்மையாகவும், பொதுப் பெயர்களையிட்டுக் கூறுவதே பெரும்பான்மையாகவும் காணப்படும். இவ்விஷயத்திற்கு உதாரணங்காட்டவேணுமேயானால் ஆயிரக்கணக்கான

பாசுரங்கள் கிடைக்கும். விஷயம் நெஞ்சில் பதிவதற்காகச் சில உதாரணங்கள் எடுத்துக் காட்டுவோம். "மானேய் நோக்கி மடவாளை மார்வில் கொண்டாய் மாதவா" (திருவாய்மொழி) "நெய்வாய வேல்நெடுங்கண் நேரிழையுமிளங்கோவும் பின்பு போக, எவ்வாறு நடந்தனை யெம்மிராமாவோ!" (பெருமாள் திருமொழி) 'வில்லேர் நுதல் வேல் நெடுங்கண்ணியும் நீயும் கல்லார் கடுங்கானந்திரிந்த' (பெரிய திருமொழி) இப்பாசுரங்களைக் காணலாம். (1) மானேய் நோக்கி மடவாளென்பது ஸ்த்ரீ ஸாமான்யத்துக்குப் பொது வாசகமே யல்லது ஒரு வ்யக்தி விசேஷத்திற்கு வாசகமன்று; ஆயினும் நம்மாழ்வார் ஸ்ரீமஹாலக்ஷ்மியாகிற வ்யக்திவிசேஷத்தை விவக்ஷித்து 'மானேய் நோக்கி மடவாள்' என்றார். (2) 'நெய்வாயவேல் நெடுங்கண்ணேரிழை' என்பதும் ஸ்த்ரீகளுக்குப் பொது வாசகமே யல்லது ஒரு வ்யக்தி விசேஷத்திற்கு வாசகமன்று. ஆயினும் குலசேகராழ்வார் ஸீதாபிராட்டியாகிற வ்யக்தி விசேஷத்தை விவக்ஷித்து, *நெய்வாய வேல்நெடுங் கண்ணேரிழை* யென்றார். (3) *வில்லேர் நுதல் வேல்நெடுங்கண்ணி யென்பதும் ஸ்த்ரீகளுக்குப் பொதுவாசகமேயல்லது ஒரு வ்யக்தி விசேஷத்திற்கு வாசகமன்று. ஆயினும் திருமங்கையாழ்வார் ஸீதாபிராட்டியாகிற வ்யக்தி விசேஷத்தையே விவக்ஷித்து *வில்லேர் நுதல்வேல் நெடுங்கண்ணி யென்றார். கண்ணபிரானுடைய சரித்திரங்களில் பூதனையின் பெயரையிட்டே சொல்வதுமுண்டு. அது சில விடங்களில். பல விடங்களில் பொதுப்பெயரே காணப்படும். பெரிய திருமொழியில் *கஞ்சோர வெங்குருதி வந்திழிய வெந்தழல்போல் கூந்தலாளை, மண்சேர முலையுண்டமாமதலாய்* (7—4—1) என்கிறார் திருமங்கையாழ்வார். இங்கு 'வெந்தழல்போல் கூந்தலாள்' என்றது பூதனையை நோக்கியேயாம்; 'முலையுண்ட' என்று அடுத்துவரும் சொல்தொடரினால் இப்பொருள் தெரிந்துகொள்ளக்கூடுமேயல்லது இயற்கையாக இச்சொல் பூதனையை யுணர்த்த மாட்டாது.

திருவல்லிக்கேணிப் பதிகத்திலுள்ள *அந்தகன் சிறுவன் என்கிற ஆறும் பாட்டில் முதலடியிலும் மூன்றாமடியிலும் த்ரௌபதியைப்பற்றிக் கூறுகின்றாராழ்வார். முதலடியில் 'அணியிழை' என்கிற சொல்லேயுள்ளது. மூன்றாமடியில் 'சந்தமல் குழலாள்' என்ற சொல்லேயுள்ளது. இவை ஸ்த்ரீகளுக்குப் பொதுப்பெயர்களே யல்லது ஒரு வ்யக்தி விசேஷத்திற்குச் சிறப்புப்பெயரன்று. ஆயினும் ஆழ்வார் இப்பொதுப் பெயர்களையிட்டே இங்கு த்ரௌபதியைக் குறிப்பிடுகிறார். கண்ணபிரான் ஸத்யபாமைப் பிராட்டிக்காகப் பாரிஜாதாபஹரணம் செய்தருளினவாற்றைத் திருமங்கையாழ்வாரருளிச் செய்யுமிடங்களில் பாரீர்; மட்டவிழுங் குழலிக்கா வானோர் காவின் மரங்கொணர்ந்தான்" என்றும் "மட்டேறு கற்பகத்தை மாதர்க்காய் வண்துவரை நட்டான்" என்றுமருளிச் செய்கிறார். இவ்விடங்களில் 'மட்டவிழுங்குழலி' என்பதும் மாதர் என்பதும் பொதுப் பெயர்களேயன்றிச் சிறப்புப் பெயர்களல்ல. இராமபிரான் குஹப்பெருமாளோடு சேரணிந்த தோழமைகொண்டபோது பிராட்டியைக் காட்டி இவள் உன் தோழி யென்று கூறியதைக் கூறுகின்ற திருமங்கையாழ்வார் "மாழைமான் மடநோக்கி உன்தோழி" என்கிறார். இங்கு 'மாழைமான் மடநோக்கி' யென்றது பொதுப்பெயரேயன்றி ஸீதைக்குச் சிறப்புப்பெயரன்று. திருவாய்மொழியில் *ஆயர்கொழுந்தாய் அவரால் புடையுண்ணும் மாயப்பிரானை* என்ற பாசுரத்தில் கண்ணபிரான் விஷயத்தில் பிரயோகிக்கப்பட்ட

'ஆயர் கொழுந்து' என்னுஞ் சொல்லை அவ்வாழ்வார் தாமே *கூந்தல் மலர் மங்கைக்கும் மண்மடந்தைக்கும் குலவாயர் கொழுந்துக்கும் கேள்வன்றன்னை* என்ற பாசுரத்தில் நப்பின்னைப் பிராட்டிக்கு வாசகமாகப் பிரயோகித்தருளினார். இங்ஙனமெடுத்துக் காட்டப்புகின் விரிவு பெரிதுடைத்தாம். இப்படிப்பட்ட பிரயோகம் அருளிச் செயல்களில் மட்டுமேயல்ல; கம்பராமாயணம், அஷ்டப்பிரபந்தம் முதலிய தமிழ் நூற்களெல்லாவற்றிலும் யதேஷ்டமாகக் கிடைக்கும். இந்த ஸரணியானது தமிழ் நூல்களுக்கே அஸாதாரண மென்னலாம். "அர்த்தாத் ப்ரகரணால்லிங்காத்—அர்த்த நிர்ணய:" என்று வடநூலார் காட்டிய வழியைக்கொண்டு பொருள் காண்கிறோம்.

இனி ப்ரக்ருத விஷயத்தைக் கொள்வோம். கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் வளர்ந்தருளுங்காலத்து ஏழெருதுகளை வலியடக்கி கும்பர் மகளான நப்பின்னையை மணம் புணர்ந்ததாக ஒரு சரித்திரமுண்டு. இதை ஆழ்வார்கள் அடிக்கடி பேசியநுபவிப்பர்கள். அந்த நப்பின்னையையே பின்னை யென்றும் வழங்குவர். [பின்னைமணாளனை, பின்னைதோள் மணந்த பேராயா!] அவளுக்கு வடமொழித் திருநாமம் நீளா என்பதாம். அது கூரத்தாழ்வானாலும் பட்டராலும் வெளியிடப்பட்டுள்ளது. ஸுந்தர பாஹுஸ்தவத்தில் "நீளா குலேசஸத்ருசி" என்றது கூரத்தாழ்வான் திருவாக்கு; "நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தம்" இத்யாதியான திருப்பாவைத் தனியன் பட்டர் திருவாக்கு. அப்பயதீக்ஷிதரால் குவலயாநந்தத்தில் உதாஹரிக்கப்பட்டுள்ள "பத்மே த்வந்நயநே ஸ்மராமி" என்றவொரு ச்லோகத்திலும் நீளா என்கிற இத்திருநாமம் காட்டப்பட்டுள்ளது. ஆகவே, எருதேழடர்த்து மணந்துகொள்ளப்பட்ட மனைவிக்கு நப்பின்னையென்பது தென்மொழித் திருநாமமென்றும், நீளா என்பது வடமொழித் திருநாமமென்றும் தேறி நின்றது. ஆழ்வார்கள் எருதேழடர்த்த கதையைக் கூறுமிடங்களில் பெரும்பாலும் நப்பின்னையை வெளிப்படையாகக் கூறாது பொதுப் பெயர்களாலேயே கூறியுள்ளார்கள். "காம்பணைதோள் பின்னைக்காய் ஏறுடனேழ் செற்றதுவும்" "பின்னைபொருட்டு ஆன்வென்றானூர்" என்றிங்ஙனேயுள்ள பாசுரங்கள் மிகச்சிலவே. "மின்னினன்ன நுண்மருங்குல் வேயேய் தடந்தோள் மெல்லியற்கா, மன்னுசினத்த மழவிடைகள் ஏழன்றடர்த்த மாலிடம்" "கொடி போலிடையாள் பொருட்டாக, வன்தாள் விடையேழன்றடர்த்த" "பந்தணைந்த மெல்விரலாள் பாவை தன் காரணத்தால் வெந்திறலேறேழும் வென்ற வேந்தன்" என்றிங்ஙனேயுள்ள பாசுரங்கள் மிகப்பல. மேலேயெடுத்துக் காட்டியுள்ள பாசுரங்களில் நப்பின்னையென்கிற சிறப்புப்பெயர் இல்லை, பொதுப்பெயரேயுள்ளது. இருந்தாலும் எருதேழடர்த்தவாற்றைச் சொல்லியிருக்கையாகிற ஸமபிவ்யாஹார பலத்தினால் நப்பின்னையென்கிற சிறப்புப் பொருள் கிடைத்தே தீருகின்றது. திருமங்கையாழ்வார் திருவெழுகூற்றிருக்கையில் "அறுபதமுரலுங் கூந்தல் காரணம், ஏழ்விடையடங்கச் செற்றனை" என்றருளியுள்ளார். இங்கு 'ஏழ்விடையடங்கச்செற்றனை' என்பதற்கு—ஏழெருதுகளைக் கொன்றாயென்று பொருள். அதற்கு முன்னேயுள்ள 'அறுபதமுரலுங் கூந்தல் காரணம்' என்பதற்கு என்ன பொருளென்று விமர்சிக்கவேணும். அறுபதமென்று வண்டுக்குப் பெயர். வண்டுகள் ரீங்காரம் செய்யப்பெற்ற கூந்தல் என்றதாயிற்று. இச்சொல்தொடர் அன்மொழித்தொகை [பஹுவ்ரீஹி ஸமாஸம்] பெற்றது; ஆதலால் வண்டுகள் முரலப்பெற்ற கூந்தலையுடையவள் என்று பொருள் பட்டு நிற்கும்.

எனவே, இது மாதர்க்குப் பொதுப் பெயராகவின்றது. பிரகரணம் நோக்கி 'நப்பின்னைப் பிராட்டிக்காக' என்று பொருள் கொள்ளக்குறையில்லை. இதை வடசொல்லால் மொழி பெயர்க்கவேண்டுமானால் வசநவ்யக்தி எப்படியிருக்கவேணுமென்பதை வித்வான்கள் அறிவார்கள். நீலா நிமித்தம் என்றோ, ஷட்பதஜங்க்ருத சிகுரசாலிநீநிமித்தம் என்றோ மொழிபெயர்க்கவேணுமேயல்லது வேறுவிதமாக மொழிபெயர்க்கலாகாதென்பது கல் வெட்டு. இப்படி திருமங்கையாழ்வாருடைய திருவாக்கில் 'அறுபதமுரலுங் கூந்தல் காரணம்' என்று அவதரித்திருப்பதுபோல நம்மாழ்வாருடைய திருவாக்கிலும் "வம்பவிழ் கோதை பொருட்டா மால்விடையேழுமடர்த்த" என்கிற பாசுரம் அவதரித்துள்ளது. சொல்வடிவத்தில் வாசியுள்ளதேயன்றி கருத்தில் சிறிதும் வாசியில்லை. நப்பின்னைக்காக எருதேழடர்த்த வாற்றையே இவ்வாழ்வாருமருளிச் செய்கிறார். நப்பின்னையை 'அறுபத முரலும் கூந்தல்' என்ற சொல்தொடரால் திருமங்கையாழ்வார் குறித்தனர். அப்பிராட்டி யையே நம்மாழ்வார் 'வம்பவிழ் கோதை' என்ற சொல் தொடரால் குறிக்கின்றனர். அங்கு எப்படி அன்மொழித் தொகையோ இங்கும் அப்படியே அன்மொழித்தொகைதான் [பஹுவ்ரீஹி ஸமாஸமே] இதை ஒருபோதும் மறக்கலாகாது. நறுமணம் புறப்படுகின்ற பூமாலையையுடையவள் என்பது சப்தார்த்தம். கோதையென்கிற தமிழ்ச் சொல்லுக்குப் பூமாலையென்பதும், கூந்தலென்பதும் பொருள். பூமாலையென்கிற பொருளிலேயே பெரும்பான்மையான பிரயோகம் காண்கிறது. "வம்பவிழ் கோதைபொருட்டா" என்ப தற்கு பரிமள ப்ரசுரமான பூமாலையை யணிந்துள்ளளைக்காக மால்விடையேழுமடர்த்தவ னென்றதாயிற்று. அவள் யாவளென்னில் நப்பின்னைப் பிராட்டியென்பது அர்த்தாத் ஸித்தம். திருவாய்ப்பாடியில் விடையேழடர்த்தது நப்பின்னைக்காகவேயன்றோ. இனி *வம்பவிழ்கோதை பொருட்டா' என்கிறவிதனை வடமொழியில் மொழிபெயர்க்க வேணுமானால் எங்ஙனேயாகவேணுமென்பதை விவேகிகள் விமர்சிப்பது, கருத்துவகையில் நீளார்த்தம் என்றும், சொல்வடிவத்தின்மேல் 'ஸுரபிமால்யாலங்க்ருதலலநார்த்தம்' என்றும் மொழிபெயர்க்கலாமேயல்லது வேறுவிதமாக மொழிபெயர்க்கத் தகுதியில்லை.

தேசிகர் கோதார்த்தமென்று மொழிபெயர்த்திருப்பதாக த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியில் பாடம் காண்கிறது. மூலத்தில் 'கோதை பொருட்டா' என்றிருப்பதால் அதற்கு நேராக இங்ஙனே மொழிபெயர்த்ததில் என்ன பிசகு? என்று சிலர் கேட்கக் கூடும். அவர்கள் என்ன ஆலோசிக்கவேண்டுமென்றால், மூலத்தில் 'நங்கை பொருட்டா', 'மங்கை பொருட்டா' என்றிருந்தால் அதை நங்கார்த்தம் மங்கார்த்தம் என்று மொழி பெயர்த்து விடலாமாவென்று ஆலோசிக்கவேண்டும். இங்கு மூலத்திலுள்ள கோதை யென்கிற தமிழ்ச் சொல்லுக்கு என்ன அர்த்தம்? கோதா என்கிற வட சொல்லுக்கு என்ன அர்த்தம்? என்று நன்கு விமர்சித்தால் கோதை பொருட்டாவென்கிற மூலத்திற்கும் கோதார்த்தமென்பதற்கும் ஸமந்வயலேசமுமில்லையென்று எளிதிலுணர்வர்.

கோதா என்கிற வடசொல்லுக்கு மூலமான கோதையென்கிற தமிழ்ச்சொல் ஒன்று உண்டு; திருப்பாவையின் முப்பதாவது பாட்டிலும் நாச்சியார் திருமொழியின் ஒவ்வொரு பதிகத்தின் இறுதிப் பாசுரங்களிலும் ஆண்டாளுக்குத் திருநாமமாகக் கோதை யென்கிற சொல் காணப்படுவதுண்டே, அதற்கும் கோதா என்கிற வட சொல்லுக்கும்

நல்ல பொருத்தமுண்டு; அதை அபலபிக்ககில்லோம். அந்த மருமத்தைத் தனியே சில நூல்களில் விவரித்திருக்கிறேன்; கண்டுகொள்க. மஹா ஜ்ஞாதாவான தேசிகர் *கோதை பொருட்டாவென்கிற இவ்விடத்திற்கு கோதார்த்த என்று ச்லோகமிட்டதுபற்றி ஆராய வேணும். இந்த த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னாவளிக்கு அடியேன் தமிழுரை யெழுதிப் பலவாண்டுகட்குமுன்பே அச்சிட்டு வெளியிட்டிருக்கிறேன்; எடுத்துப்பார்க்க. தேசிகருடைய ஞானத்திற்குக் குறைகூற வொண்ணாது; இங்குப் பாடப்பிறழ்வு நேர்ந்திருப்பதாகக்கொள்வது தவிர வேறு புகலில்லை. திருநாட்டிலிருந்து சில வித்வான்கள் திரும்பி வந்தாலும் கோதார்த்தமென்பதை ஸமர்த்திக்க ஒருபடியாலும் முடியாதென்பது திண்ணம். *சேவடி மேலணி செம்பொற்றுழாயென்றே கூவுமால் கோள்வினையாட்டியேன் கோதையே* என்றும், கோலந்திகழ் கோதையென் கூந்தலுக்கே* என்றுமுள்ள திருவாய்மொழிப் பாசுரங்களைக்கொண்டு, தமிழறிவற்ற சிலர், நம்மாழ்வார்க்கும் கோதையென்கிற திருநாமமுண்டுகாணும் என்று சொல்வதுண்டு; அதுபோல நப்பின்னைக்கும் கோதையென்றும், கோதா என்றும் திருநாமமுண்டென்று சில பாமரர்களின் செவியிலே ஏகாந்தமாகப் பேசிக்கொண்டு போதுபோக்கலாமத்தனையன்றி வேறொன்றும் செய்யலாகாது. யாதவாப்யுதயத்தில் நீலா என்றே ஸ்வாமி ஸாதித்தது. ... ○

# விஜயவீர ஸம்பாஷணை (இரண்டா நாள்)

**(விஜயராகவரும் வீரராகவரும் சந்த்ரபுஷ்கரிணிக் கரையில் பேசுகிறார்கள்.)**

**(விஜய.)** வீரராகவரே! என்ன? என்னைப் பார்த்துத் தலைமறைகிறீர்? இப்படி வாரும். இன்றக்கு ராஹுகாலமில்லை காணும். வாரும். இன்று ஒரு விஷயம் கேட்கிறேன், சொல்லுகிறீரா?

**(வீர.)** ராஹுகாலமில்லாவிட்டாலும் யமகண்டவேளையாயிருக்கிறது. இருக்கட்டும். கேட்டுப்பார்க்க, தெரிந்தவரையில் சொல்லுகிறேன்.

**(விஜய.)** உமக்கு திவ்யப்ரபந்தத்தில் கொஞ்சம் பரிசயமுண்டல்லவா? (உண்டு) அதில் கோதை யென்கிற சொல் எத்தனையிடங்களில் வருகிறது? தெரியுமா? சொல்லுவீரா? திருப்பாவையிலும் நாச்சியார் திருமொழியிலும் வருமவை எனக்குத் தெரியும்: அவற்றை விட்டுவிட்டு மற்ற திவ்யப்பிரபந்தங்களில்மட்டும் சொல்லும் பார்ப்போம்.

**(வீர.)** இதில் நமக்கு சிரமமில்லாதபடி காஞ்சீபுரம் P. B. A. ஸ்வாமி சிட்டா எடுத்திருக்கிறாரே. அதில் விளக்கமாகக் காணலாமே.

**(விஜய.)** அந்த ஸ்வாமி எடுத்திராநின்றது இருக்கட்டும்மேணே; உமக்கு நினைவுக்கு வருகிறவரையில் சில விடங்களைச் சொல்லுமே.

**(வீர.)** அல்லியம்பூமலர்க்கோதாய்—பூங்கோதையாய்ச்சி—கள்ளவிழ்கோதை—கோலந்திகழ்கோதை—அல்லியங்கோதை—கோதை நறுமலர் மங்கை மார்பன்—கோதை

வேலைவர்க்காய் ..... இப்படி ஏராளமாக வருகிறது. விஜயராகவஸ்வாமிந்! இதில் உம்முடைய ஜிஜ்ஞாஸை என்ன? சொல்லும்.

(விஜய.) ஜிஜ்ஞாஸையா? கேளும்; ஆண்டாள் திருவாக்கில் வருகிற கோதைக்கும், மேலே நீர் சொன்ன இடங்களில் வருகிற கோதைக்கும் வாசியுண்டா? எல்லாம் ஒன்றுதானு? இதில் உம்முடைய மூளை ஏதாவது வேலை செய்திருக்கிறதா? அல்லது இனிமேலாவது செய்யுமா? வஞ்சனையின்றிச் சொல்லுமையா!

(வீர.) எப்படி வாசியில்லாமற்போகும்? நன்ருக வாசியுண்டு. ஸ்வாமி தேசிகனுல் கோதாஸ்துதியில் துதிக்கப்படுகிற கோதா என்கிற ஆண்டாள் அவளுடைய திவ்யப்பிரபந்தங்களில் கோதையெனப்படுகிருள்; மற்ற விடங்களில் வருகிற கோதைக்கு அவளைப் பொருளாகக் கொள்வதற்கு ப்ரமேயமில்லை; கூந்தல் என்றும் மாலை யென்றும் இரு பொருள்களுண்டே: அப்பொருளில்தான் பிரயோகம். இதைத் தெரிந்து கொள்ளாமல் ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் இருக்க முடியுமோ?

(விஜய.) வந்திராவழிக்கு? திருவாய்மொழியில் *வம்பவிழ்கோதை பொருட்டா* என்கிறவிடத்திலுள்ள கோதைக்கு என்ன அர்த்தம்? இதை நீர் முன்னே படித்த சிட்டாவில் எடுத்துக்காட்டவில்லையே?

(வீர.) நான் ஒரே வார்த்தை சொல்லிவிட்டேனே; ஆண்டாள் தவிர மற்றை யோர் திருவாக்கில் கோதையென்னுஞ் சொல் எங்குவந்தாலும்ஸரி, அதற்கு கூந்தல் என்ருே பூமாலையென்ருே இரண்டத்தொன்றுதான் பொருள். இதில் ஸந்தேஹமே வேண்டாம். கோதையென்கிற பெயர் ஆண்டாள் தவிர எந்த வ்யக்திக்கும் கிடையாது.

(விஜய.) ஸரி; ஸந்தேஹமே வேண்டாமென்று நீர் சொல்லுகிறவிடங்களில் கோதை என்கிற அச்சொல்லை ஸம்ஸ்க்ருதத்தில் வழங்கவேணுமானுல் எப்படி வழங்க வேண்டும்? சொல்லும்.

(வீர.) ஆண்டாளைப்பற்றி வந்தால் கோதா என்னவேணும். மற்றவிடங்களில் கேசபாசத்திற்குப் பர்யாயமான பதங்களையிட்டோ, பூமாலைக்குப் பர்யாயமான பதங்களை யிட்டோ சொல்லவேண்டியது. திருப்பித்திருப்பித் தொணதொணவென்று கேட்க வேண்டா. விஷயம் இவ்வளவே.

(விஜய.) ஒய்! வெகு ஜோராகப் பேசுகிறீரே. 'வம்பவிழ்கோதை பொருட்டா' என்றவிடத்தில் கோதைக்கு என்ன ஸம்ஸ்க்ருதம் சொல்லவேண்டும்? சொல்லுமையா? கோதா என்று சொல்லலாமா? 'கோதாநிமித்தம் ஸப்தவ்ருஷபத்வம்ஸக:' என்று இங்கே மொழிபெயர்ப்புச் செய்யலாமா? சொல்லும்.

(வீர.) ஸ்வாமிந்! செய்யலாமென்று என்வாயினுல் எப்படிச் சொல்லமுடியும்? மால்விடையேழுமடர்த்தது கோதாநிமித்தமாக இருந்தால் தாராளமாகச் சொல்லலாம். கதை அப்படியில்லையே. தேசிகனே யாதவாப்யுதயத்தில் நாலாம் ஸர்க்கத்தில் *திசாகஜாநாமிவ சாக்வராணும்* என்கிற ச்லோகத்தில் எருதேழடர்த்த கதையைச் சொல்லி (நீலாம் லேபே) என்றுதானே சொல்லியிருக்கிருர். (கோதாம் லேபே) என்று சொல்லவில்லையே. வீணை ஆக்ரஹங்கொண்டு *முகமஸ்திநிபாஷணம் பண்ணுவதில் என்ன லாபம்? அது பாஷணமாகாது, பஷணமேயாகும்.

(விஜய.) அப்படியானால் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னாவளியில் "வம்பவிழ் கோதை பொருட்டா… ..என்பதற்கு (கோதார்த்தோக்ஷாவமர்த்த) என்றிருப்பதை (நீளார்த்தோக்ஷாவமர்த்த) என்று திருத்த வேண்டியதுதானே.

(வீர.) என்னுடைய பிதாமஹர் நிகமபரிமலம் காலக்ஷேபம் ஸாதிக்கும்போது நான் இரண்டு மூன்று பிராயமாயிருந்தேன்; ஸிதாஸிதமாகக் கேட்டது ஞாபகமிருக்கிறது. கோதைக்காகவும் (ஆண்டாளுக்காகவும்) வடபெருங்கோயிலுடையான் எருதேழடர்த்ததாக ஸ்தலபுராணத்திலிருப்பதாய் தேசிகனே நிகமபரிமலத்தில் ஸாதித்திருப்பதை தாதா ப்ரவசனம் செய்திருக்கிறார்; ஆகவே ஸஹஸா அடியேன் என்ன சொல்லிவிட முடியும்? நிகமபரிமலம் ஆருயிரப்படியுட்பட எல்லாப்படிகளுக்கும் கண்டனமாகத் தோன்றினதாதலால் அதில் (கோதை பொருட்டா) என்பதற்கு கோதா தேவிக்காக என்று வியாக்கியானமிட்டிருக்கலாமென்றே நினைக்கிறேன். நம்மாழ்வார் காலத்தில் கோதாதேவி யுண்டாகாதிருந்தாலும் வ்யாக்க்யாதாக்கள் காலத்தில் உண்டாயிருக்கக் குறையில்லையே. அதவா, தொண்டரடிப் பொடியாழ்வார் காலத்திலும் திருமங்கையாழ்வார் காலத்திலும் எம்பெருமானார் (உடையவர்) இல்லாதிருக்கச் செய்தேயும், "உடையவர் வலையுள் பட்டு" என்று திருமாலையிலும் "எம்பெருமானார்க்கிடம்" என்று பெரிய திருமொழியிலும் பவிஷ்யதாசார்யப்ரதிஸந்தானத்தாலே ஸாதித்திருப்பது போலவுங்கொள்ளலாம்.

(விஜய.) அஜாகளமே! ஸம்ஸ்க்ருதத்தில் பஹுவ்ரீஹி ஸமாஸமென்பதைத் தமிழில் அன்மொழித் தொகையென்பது. "அந்யபதார்த்தப்ரதாநோ பஹுவ்ரீஹி:" என்பது உமக்குத் தெரிந்திருந்தால் ஸரி. தெரிந்திராவிட்டால் இன்று தெரிந்து கொள்ளும். (வம்பவிழ் கோதை பொருட்டா) என்பதை ஸுரபிகுந்தலா நிமித்தம் என்றுதான் மொழி பெயர்த்தாகவேண்டும். இதில் எப்படி அந்யபதார்த்தப்ரதாநமான பஹுவ்ரீஹியோ அப்படியேதான் வம்பவிழ் கோதையென்றவிடத்திலும்—என்பதை மறவாதீர். அங்க அந்யபதார்த்தம் எதுவென்பதை ப்ரமாணசரணராய்த் தெரிந்து கொள்ளும். இடையிடையில் மூளை கலங்கிப் பேசாதீர்.

(வீர.) ஸ்வாமி ஸ்வாமீ! ஏழாட்காலும் பழிப்பிலோமான நாங்கள் அந்ய பதார்த்தகந்தமுமறியோம். இப்போது கொழுத்த யாகண்டவேனே. போய்வருகிறேன். ❁

---

## ஸ்ரீ மதுராந்தகம் ஸ்வாமிகளைப்பற்றி.

இளமை தொடங்கி அடியேனுக்குப் பரமாப்தரும் அடியேன்பால் பரமக்ருபை பூண்டவருமான மதுராந்தகம் ஸ்வாமி ஏதோ விதிவசத்தால் எழெட்டு மாதகாலமாக ப்ரதிவாதியாய் நின்று ஏதேதோ எழுதிவருகிறாரென்பதை உலகமறிந்திருக்கின்றது. நம் ஸ்ரீ ராமாநுஜன் வாசகர்கள் விசேஷித்து அறிந்துள்ளார்கள். 25 30 ஸம்வத்ஸரங்களுக்கு முன்பும் இப்படி ப்ரதிவாதியாய் நின்று சில எழுதியும் அச்சிட்டும் உடனே ப்ரத்யாக்க்யானங்கள் பெற்று சாந்தராய் நின்றார். "புநரபி தைவதுர்விபாகாத் ஆலர்க்கம் விஷமிவ" என்று பவபூதிமஹாகவி கூறின கட்டளையிலே மறுபடியும் கிளர்ச்சி விளைந்திருக்கின்றது. ஆசிரியர் "சித்திரகுத்தன் தெரித்துவைத்த சுருணை" என்றாப்போலே சில சுஷ்க சுருணைகளை யெழுதி அடிக்கடி தபால்மூலம் அனுப்புகிறார். அவற்றால் உலகுக்கு ஒரு பயனுமாகாதேயென்று என்து நிர்வேதத்தை அடிக்கடி அவருக்கே எழுதிவருகிறேன். ஸ்ரீரங்கநாத பாதுகா முதலிய பத்ரிகைகளில் பிரசுரித்தால் லோகோபகாரமாகுமேயென்று பலகால் தெரிவித்தேன். அதையே இங்கு நாடறியத் தெரிவித்து நிற்கிறேன். … … …

(ஆசிரியர்)

திருச்சி. திருக்கச்சிநம்பிஸபையில் பெரிய திருமொழி ப்ரவசனகோஷ்டி.



ஸ்ரீமதுபயவே. ஸ்ரீஸூக்திரத்னாகர. இளயவில்லி சடகோபாசார்யஸ்வாமியின் காலக்ஷேப கோஷ்டி.

# ஸ்ரீஸூக்தி ரத்நாகரஸ்வாமி.

அமுதனார் நூற்றந்தாதியில் அருளிச்செய்யும் பாசுரம் ஒவ்வொன்றும் உருக்குவதே யாயினும் *நினையார் பிறவியை நீக்கும் பிரானை* என்கிற பாசுரம் அடியேனை மிகவுருக்குமது. இப்பாசுரத்தில் "இருங்கவிகள் புனையார்" என்கிற வார்த்தை அமுதனாருடைய உள்ளத்துளூறிய வருத்தத்தை வெளிக்காட்டுகின்றதல்லவா? *கற்றவர் காமுறு சீலனை இராமானுசனைக் குறித்து உலகிலுள்ள கவிகளெல்லாரும் கவியியற்றித் துதிக்க வேண்டியிருக்க, கவியியற்றுவார் ஒருவருமில்லையேயென்றார் முன்னம். கவியியற்றகில்லாதார் என்செய்வது? என்று கேள்விவருமே; அதற்கு ஸாதிக்கிறார் [புனையும் பெரியவர் தாள்களில் பூந்தொடையல்வனையார்] கவியியற்றுவார்மீது பொறாமைகொள்ளாமல் குறைகூறாமல் அவர்களைப் போற்றவேணுமென்பது இதன் உட்கருத்து. எம்பெருமானாரை நோக்கிச் சொன்னவிது உபலக்ஷணம். உலகில் யோக்யதை ஸம்பாதித்தவர்களை உகந்து கொண்டாடவேணுமென்பதே இதனால் தேறுவது.

கல்வி கற்ற பெரியார் பக்கல் நெடுநாளாகவே அடியேன் உளங்கனிந்திருப்பவன். அதனாலேயே நூற்றுக்கணக்கான பெரியார்களின் திருவுருவப் படங்களை சேகரித்து ப்ளாக்குகளும் செய்வித்துப் பிரசுரம் செய்வித்து வருகிறேன். இதில் எந்த வைஷம்யத்தையும் பாராட்டாமல் வித்வத்பக்ஷபாதம் என்பதொன்றையே காட்டி வருகிறேனென்பதை அடியேனாக விஜ்ஞாபிக்க வேண்டுமோ?

எழுபத்தேழு பெரியார்களின் பெருமையென்று மகுடமிட்டு வைகுண்டவாஸிகளான 77 பெரியார்களின் பெருமையை ஒருவாறு வெளியிட்டு முடித்தேன் முன்னிதழில். இனி ஜீவித்திருக்கும் பெரியார்களைப்பற்றியெழுத நினைத்திருக்கையில் அழகிய மணவாளன் நியமனம் அற்புதமாகக் கிடைத்தது. திருநாராயணபுரத்தில் திருவவதரித்து ஆழ்வார் திருநகரிக்கு ஸ்வீகாரமாக வந்து சேர்ந்து, பூர்வாசாரியர்கள் பலரும் படுகாடுகிடந்தவிடமான திருவரங்கப் பெரிய கோயிலில் பத்தெட்டு ஸம்வத்ஸரமாக வாழ்ந்து வருகின்ற ஸ்ரீமதுபயவே. இளையவில்லி சடகோபாசாரியர் ஸ்வாமியைப் பற்றி ஸ்ரீராமாநுஜனில் (235ல்—"நல்லார்கள் வாழும் நளிரரங்கத்தில் நற்போது போக்குகள்" என மகுடமிட்ட கட்டுரையில் ப்ரஸ்தாவித்திருக்கிறேன். ஸ்ரீஸூக்தி ரத்நாகரமென்று விருதுபெற்ற இந்த ஸ்வாமி ஸத்ஸம்ப்ரதாய திவாகரர்—ஸதுபந்யாஸ ஸார்வபௌமர் முதலிய பலவிருதுகளையும் பெறுதற்குரியவரென்பது ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டிகளில் அனைவருமறிந்ததே. இந்த ஸ்வாமியோடு அடியேனுக்கு ஔபாதிகஸம்பந்தம் சிலவாண்டுகளாக ஏற்பட்டிருந்தாலும் ஐம்பது வருஷ காலமாக ஆத்மஸம்பந்தம் அமையப்பெற்றதுண்டு. கலைகளைக் கற்று விடலாம், 'அறக்கற்கை அரிது' என்கிறார் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார். ஸந்தேஹ விபர்யயங்களறக் கற்கையாயிற்று—அறக்கற்கை. ஸ்வாமி உபயவேதாந்த ரஹஸ்ய க்ரந்தங்களை வியாக்கியானங்களோடு வரியடைவே கற்றவர். அறக்கற்றவர். கம்ப ராமாயணம் அஷ்டப்பிரபந்தம் முதலான பலவற்றிலும் ஆழ்ந்த பரிசயமும் அநுபவமுமுள்ளவர். இந்த யோக்யதைகளுக்கெல்லாம் சிகரமாக "கடல் வாய்ச்சென்று மேகங் கவிழ்ந்திறங்கிக்

கதுவாய்ப்பட நீர் முகந்தேறி எங்கும் குடவாய்ப்பட நின்று மழை பொழியும்" என்ற பெரியாழ்வார் திவ்ய ஸூக்தியின் உள்ளுறை பொருளுக்கு ப்ரதான லக்ஷ்யமாக எழுந்தருளியிருப்பவர்.

ஸ்வாமியின் இவ்வளவு யோக்யதைகள் *கன்னவிலுங்காட்டகத்தோர் வல்லிக்கடி மலரின் நன்னறுவாசமாகாமல் திருச்சிராப் பள்ளியிலுள்ள திருக்கச்சிநம்பி ஸபையில் நாலாறு மாதகாலமாகத் தொடர்ந்து நடந்து வரும் உபந்யாஸங்களினால் திசை தோறுங் கமழ நிற்கின்றது. குறையல் கலைப்பெருமானொலிமிக்க பாடலையுண்டு உள்ளம் தடித்த ஸ்வாமியின் பெரிய திருமொழி ப்ரவசன கோஷ்டியின் ஒரு பகுதியை (பக்கம் 27ல்) ஸேவிக்கப் பெறுவீர்கள். இந்த கோஷ்டியாரும், கோஷ்டிக்கு ப்ரவர்த்தகரான உயர்திரு. K. P. S ஸௌந்தரராஜ செட்டியாரும் மற்றுமுள்ள ஸபாபிமானிகளும் ஸ்வாமிக்கு நிழலும் அடிதாறுமாக நீடூழி வாழ்ந்து திருவரங்கச் செல்வம் தழைத்தோங்கச் செய்வார்களாக. ❋

## ஸ்ரீமத்பரமஹம்ஸ. திருமலை பெரியஜீயர் ஸ்வாமி

நல்லடிக்காலமென்று கொண்டாடப்பட்டிருந்த முற்காலத்தில் திவ்யதேச கைங்கர்ய பரிபாலனத்தின் பொருட்டு எம்பெருமானார் நியமித்தருளின மடாதிபதிகளின் ஆஸ்தானங்களில் திருமலை திருப்பதி பெரிய ஜீயர் ஆஸ்தானமும் ஒன்று. *ஒழிவில் காலமெல்லாமுடனாய்மன்னி வழுவிலா வடிமை செய்யப்பாரித்த நம்மாழ்வாருடைய குறைதீர எம்பெருமானார் காலத்தில் அனந்தாழ்வான் என்ஞான்றும் விளங்கும்படியான கைங்கரியங்களை அற்புதமாகச் செய்து போந்தார். அத்தாணிச் சேவகம் செய்யும் பாக்கியம் பெற்றவர்கள் திருப்பதியிலும் திருமலையிலும் சிறிய ஜீயரும் பெரிய ஜீயருமான இருவர்.



வர்த்தமானரான ஸ்ரீமத்பரமஹம்ஸ பெரிய ஜீயர்ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் ஸாது ராமாநுஜாசார்யஸ்வாமி யென்னும் திருநாமம் பூண்டு விளங்கினவர் இங்கே ஸேவை ஸாதித்தருளா நின்றார். நியாயவேதாந்தங்களிலும், விசேஷித்து பகவத்விஷய ரஹஸ்யப்ரஸ்தானங்களிலும் இணையற்ற நிர்வாஹகர். ஸ்வாமியின் பெருமையை ஸ்ரீ ராமாநுஜன் 215ல் சிறிது விரிவாகக் காண்க. ஸ்வாமி, திருவேங்கடத்தெழில்கொள்சோதி யெந்தைதந்தை தந்தைக்கு அத்தாணிச் சேவகராய் ஞாலம்புகழ நீடூழி வாழ்க. ... ... ... ❋

# ப்ரபல ஸந்தேஹ பரிஹாரம்.

ஸ்ரீமத் பரமஹம்ஸ ஆண்டவன் ஸ்வாமி இரண்டு மாத காலமாய் பெங்களூர் மகாநகரத்தில் மல்லேச்வரத்தில் எழுந்தருளியிருந்துகொண்டு வாசாமகோசரவைபவம் பொலிய அத்யத்புதமாக மஹாபாரத ப்ரவசனம் செய்தருளும் விஷயம் நாடு நகரமும் நன்கறிந்ததேயன்றோ? அவ்விடத்தில், அடியேனுடைய ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகையும், வைதிக மநோஹரா பத்ரிகையும் மற்றும் அடியேனுடைய ஸகலக்ருதிகளும் பல வித்வான்களுக்குச் சென்றுகொண்டிருப்பதனால் அவற்றைக் கடாக்ஷித்தருளின அங்குள்ள வித்வான்கள்-ஸ்ரீமதுபயவே. ஆஸ்தான வித்வான். பண்டிதபூஷணம். ஸ்ரீக்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி முதலானவர்கள் ஸமீப காலத்தில் ஒரு நாள் மல்லேச்வரம் ஸன்னிதியில் ஒரு வித்வத்ஸபை கூட்டி அடியேனுடைய உபந்யாஸ சதத்வய மென்கிற நூலைப்பற்றி விசேஷவிமர்சம் செய்தார்களாம். உபந்யாஸ சதத்வயமென்பது ஸ்ரீ ராமாநுஜன் 199ல் தொடங்கி 208ல் முடிவு பெற்றுள்ளது. தனிப்புத்தகமாகவும் உலகமெங்கும் பரவியுள்ளது. அதில் 179 லக்கமிட்ட உபந்யாஸம் "ஸ்ரீரங்கநாத பாதுகாப்ரேக்ஷணோபந்யாஸம்" என்ற மகுடம்புனைந்தது. அவ்வுபந்யாஸத்தின் ஆரம்பம் "ஸ்ரீமதாண்டவன்" என்றிருந்ததனால் அது தொடங்கி வாசித்துக்கொண்டே போனார்களாம். 192 லக்கமிட்ட உபந்யாஸம் முடியும்வரையில் இருபத்து நான்கு பக்கங்கள் இடைவிடாமல் அநுஸ்யூதமாகப் பார்க்கவேண்டிய விஷயங்களாயிருந்தபடியால் 'ஒருவர் வாசிப்பது, மற்றவர்கள் கேட்பது' என்கிற முறையில் படனச்ரவணங்கள் நடந்து ஆராய்ச்சி செய்யப்பட்டதாம் அங்குக் கூடியிருந்த வித்வான்களால்.

180 லக்கமுள்ள உபந்யாஸம் "குரௌ வாதிஹம்ஸாம்புதாசார்ய வுரை" என்பது. அதன் தலைமேலுள்ள முக்கியமான 'விஜ்ஞாபனம்' என்னவென்றால் "நெடுநாளாக அடியேனுக்குண்டாயிருக்கின்ற விசிகித்ஸையொன்றை இந்த யானைத் திருமண் ஸந்தர்ப்பத்தில் ஸவிநயம் விஜ்ஞாபிக்கிறேன். தேசிக ஸம்ப்ரதாயமென்றும் தேசிக தர்சனமென்றும் தேசிகன் தேசிகன் தேசிகனென்றும் உருப்போடுகின்றவர்கள் தேசிகனுக்கு ஸர்வாத்மநா அநபிமதமென்று விளங்குகின்ற புண்ட்ரத்தையும் அர்த்தங்களையும் ஆதரிப்பது என்ன அபிப்ராயத்தினாலோ தெரியவில்லையே. திருவரங்கம் பெரிய கோயிலில் உள்தேசிகனை உள்ளேயொடுக்கி உத்தரவீதியுண்டா? சித்திரை வீதியுண்டா? அடையவளைந்தானுண்டா என்று தேடித் தேடிக் கோவில் கட்டுவது எதற்காக? அவருகந்த திருமண்காப்பை எதற்கு நாம் வெறுக்கவேணுமென்று ஒரு விவேகிக்கும் தோன்றவில்லையே! இதனில் மிக்கோர் வியப்புண்டே? புண்ட்ர விஷயம் கிடக்கட்டும். அர்த்த விஷயங்களிலும் அனர்த்தமாகவன்றோ கிடக்கிறது. ப்ரஸங்காத் அதனையும் விளக்குகின்றேன் அடுத்த உபந்யாஸங்களாலே" என்றுள்ளது. உடனே 180 முதல் 192 வரையில் பதின்மூன்று உபந்யாஸங்களில் விரிவாகச் செய்யப்பட்டுள்ள நிருபணங்கள்—தேசிகன் திருவுள்ளம்பற்றின அர்த்தங்களுக்கு நேர்விருத்தமான அர்த்தங்களையே நவீனர்கள் ஆதரித்து வருகிறார்கள் என்பதைக் கண்ணாடிபோல் விளக்கிக் காட்டுவன. அதிலும் 191 லக்கமிட்ட விபுலமான

உபந்யாஸம்—பிராட்டி விஷயத்தில் (ரஹஸ்யத்ரயஸாரத்தில்) முன்னுக்குப்பின் முரண் பட்டவையும் அர்த்தமில்லாதவையுமாகத் தொடையுண்டிருக்கின்ற வசன ஸந்தர்ப் பங்களை மிகமிக விளக்கிக் காட்டுவது.

இவற்றையெல்லாம் நிஷ்பக்ஷபாதமாக விமர்சித்த மல்லேச்வர வித்வான்கள் "இவற்றில் ஒன்றுகூட ஆக்ரஹத்தோடு எழுதினதாகத் தெரியவில்லையே; ஒவ்வொன்றும் ப்ரமாணசரணர்களுக்கு மிக அபிநந்தநீயமாகவிருக்கின்றதே; மேலும் இந்த விஷயங்க ளெல்லாம் ஸ்ரீமதாண்டவன் ஸ்வாமியை நோக்கியே எழுதப்பட்டனவாகவும் விளங்கு கின்றதே: இவற்றையெல்லாம் ஆண்டவன் கடாக்ஷித்தருளாமலிருந்திருப்பரா? அவர் இங்கே எழுந்தருளியிருப்பதால் ஏகாந்த ஸமயத்திற்சென்று அவரையே கேட்டுப் பார்ப்போமே" என்று பரஸ்பரம் பேசிக்கொண்டு நல்லவேளையில் ஆண்டவனை யணுகினார்களாம்; விஷயங்களை ஸம்க்ஷேபமாக விஜ்ஞாபித்து 'இதையெல்லாம் ஸ்வாமி கடாக்ஷித்ததுண்டோ? இதற்கெல்லாம் ஸ்வாமி ஸமாதானம் திருவுள்ளம்பற்றியிருப்ப துண்டோ? இதைப்பற்றி இன்று எங்களுக்கு அநுக்ரஹித்தேயாகவேணும்' என்று பிரார்த்தித்தார்களாம். அப்போது ஆண்டவன் ஸாதித்தாராம்—"அண்ணா ஸ்வாமியின் பிரசுரங்களையெல்லாம் ஓரக்ஷரம் விடாமல் நான் பார்த்துத்தான் வருகிறேன்; அதனால் எனக்கு எவ்விதமான சித்தவிகாரமும் உண்டாவதில்லை; பூர்வாச்ரமத்திலேயே உண்டான தில்லையே; இவ்வாச்ரமத்தில் உண்டாக என்ன ப்ரஸக்தி? என்று.

அதற்குமேல் அந்த வித்வான்கள் "பாதுகாபத்ரிகையிலாவது இவற்றுக்கு ஸமாதானம் வெளிவரும்படி அநுக்ரஹித்தருளலாகாதா?" என்றார்களாம். "விவாத விஷயங்களுக்குப் பத்ரிகையில் எள்ளளவும் அவகாசமளிக்கக் கூடாதென்றே அடிக்கடி நான் தெரிவித்து வருகிறேன்" என்று ஆண்டவன் ஸாதிக்க, அந்த வித்வான்கள் நியமனம் பெற்றுக்கொண்டு திரும்பிவிட்டார்களாம். இதை வெகு விஸ்த்ருதமாகத் தெரிவித்திருக்கின்ற ஸ்ரீமான் உவே. E. S. பூவராஹாசாரியர் M. A. ஸ்வாமியின் ஸ்ரீமுகத்தையே இங்கு வெளியிட விருப்பங்கொண்டேன்; ஆனால் அது ஸம்ஸ்க்ருத பாஷையிலிருப்பதால் ஸத்யவகாசே வைதிக மநோஹராவில் வெளியிடலாமென்று விட்டிட்டேன். ஆண்டவன் ஸாதித்தருளின ஸமாதானம் உண்மையில் அவருடைய பரமஸாத்விக ப்ரக்ருதிக்குச் சேர்ந்ததே. இவ்விஷயம் நிற்க. இதையொட்டி மல்லேச்வர வித்வான்கள் ப்ரபலஸந்தேஹமென்று ஒன்று தெரிவித்துள்ளார்கள். அந்த ஸ்ரீமுகமும் ஸம்ஸ்க்ருதத்திலிருந்தாலும் அதன் ஸாரத்தைத் தமிழில் தெரிவிக்கிறேனிங்கு;

"ஸமீபத்தில் தேவரீருடைய வைதிக மநோஹராவில் வெளிவந்த ஸதர்த்த ஸப்த சதியின் மூன்றாவது சதகத்தை ஊன்றி வாசித்த பிறகு தேவரீருடைய தமிழ் நூல்களை யெல்லாம் ஆழ்ந்து அநுபவிக்கவேணுமென்றுதோன்றி ஸ்ரீஉவே. டாக்டர் V. ராமை யங்கார் ஸ்வாமியிடமிருந்தும் ஸ்ரீஉவே. வித்வான் இளையவில்லி பூவராஹாசாரியர் ஸ்வாமியிடமிருந்தும் முக்கியமான சில நூல்களைப் பெற்றுப் பலராய்க்கூடி வாசித்தோம். விஷயங்களெல்லாம் அத்யந்தம் ஸமீசீனங்களாகவேயிருக்கின்றன. சிலவாண்டுகட்குமுன்பு தென்பரையாண்டவன் தேவரீரைப்பற்றிப் பிரசுரப்படுத்தி யிருந்த அபிநந்தன பத்ரிகை ஸத்யம் ஸத்யம் என்றே ஒவ்வொருவரும் சொல்லும்படி

யிருந்தது. தேவரீருடைய லேகங்களுக்கு ப்ராமாணிகமான வழியில் ஸமாதானம் சொல்லவேணுமென்றால் அஞ்ஜலிபந்தர் தவிர வேறு எந்த மார்க்கமுமில்லையென்று நிச்சயிக்கிறோம். இங்குள்ள உபயகலையாரும் ஸாகண்டமாகச் சொல்லும் விஷயமேயிது. ஆனால் எங்களுக்குத் தோன்றியிருக்கிற ஒரு ப்ரபலஸந்தேஹத்தைத் தெரிவிக்கிறோம்; எங்களுக்கு த்ருப்தியாகும்படி ஸமாதானம் தெரிவிக்கப் பிரார்த்திக்கிறோம். (அதாவது) புண்ட்ரத்திலும் அர்த்த விசேஷங்களிலும் தேசிகன் தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்தர் என்று நிஸ்ஸந்தேஹமாகவும் கல்வெட்டாகவும் தெரியாநிற்க, நவீனர்கள் அவரை எப்படி ஆதரிக்கத் தொடங்கினார்கள்? பிராட்டி விஷயம் ப்ரபத்தி விஷயம் ......என்று எந்த விஷயத்தையெடுத்துக்கொண்டாலும் தேசிகனுடைய திவ்ய ஸூக்திகள் நவீனர்களுக்கு வஸ்துஸ்திதியில் கண்டே கடுவாயிருக்க, இது ஸர்வ்வயக்தமாகவுமிருக்க, வித்வான்களாய் விவேகிகளாயிருப்பவர்களும் அவரைத் தங்களுக்கு கூடஸ்தரென்று சொல்லிக் கொள்வதோடு நில்லாமல் பிரபல கலஹங்களையும் கிளப்பி அபரிமித கோலாஹலங்களையும் செய்து வருகிறார்களே, இது எப்படி? இதைப்பற்றி தேவரீரே விமர்சித்து எங்களைத் தெளிவிக்கும் வியாஜத்தால் உலகத்தையே தெளிவிக்கும்படி பிரார்த்திக்கிறோம்'' என்று மல்லேச்வர வித்வான்களின் ப்ரபல ஸந்தேஹ விஜ்ஞாபனம். இற்தகு விடை பிறப்பதை முக்கியமாகக் கொண்டே இக்கட்டுரைக்கு ப்ரபல ஸந்தேஹ பரிஹார மென்று மகுடமிட்டேன்.

அடியேனுடைய நூல்களில் இந்த ஸந்தேஹத்திற்குப் பரிஹாரம் ஏற்கெனவே வெளிவராமலில்லை. ஆனாலும் 'அந்த நூலையெடுத்துப் பார்க்க; இந்த நூலையெடுத்துப் பார்க்க' என்று கோடி காட்டிவிடுவதில் பயனில்லையாகையாலும், மேலே ப்ரஸ்தாவித்த ஸந்தேஹம் உலகில் பலபேர்களுக்கு உண்டாகக்கூடியதாதலாலும், ப்ரக்ருத ஸந்தர்ப்பத்தில் மிகமிக உண்டாகக்கூடியதாதலாலும் உள்ளவாறு தத்துவங்களை விளக்குகிறேன். முதலில் ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் ஒன்று திடமாகப் பதிந்திருக்கவேண்டும், பதிந்தேயிருக்கின்றது; அதாவது—புண்ட்ரத்திலும் ஸம்ப்ரதாயார்த்தங்களிலும் நவீனர்களுக்கு தேசிகனோடு ஸம்பந்தகந்தமும் கிடையாதென்கிற உறுதி. இந்த உறுதியை அடிப்படையாகக் கொண்டுதானே மேலே குறித்த ஸந்தேஹம் தோன்றியுள்ளது. ஸந்தேஹ பரிஹாரத்திற்குமுன்னே அவதாரிகையாகச் சிலவிஷயங்கள் விஜ்ஞாபிக்கிறேன்.

அடியேனுடைய திருத்தகப்பனார் இப்போது எழுந்தருளியிருந்தால் அவர்க்கு இன்று நூற்றெட்டு திருநக்ஷத்ரம் நிரம்பியிருக்கும். ரௌத்ரி ஹ்ஸ ஆவணிமீ பூரட்டாதி நக்ஷத்திரத்தில் அவருடைய திருவவதாரம் இன்று ஆவணிமீ பூரட்டாதி நக்ஷத்திரத்தில் இக்கட்டுரையெழுதுகிறேனாகையால் அவரை நினைத்து, அதன் மூலமாகப் பல விஷயங்களையும் நினைத்து விஜ்ஞாபிக்கிறேன். திருத்தகப்பனார் நாற்பத்து நான்கு திருநக்ஷத்ரமே யெழுந்தருளியிருந்தார். அடியேனுடைய பதினாலாவது பிராயம் நிரம்பினவுடனே அவர் பரமபதித்தார். நான் புத்தியறிந்த ஐந்தாவது பிராயம் முதல் அவரைவிட்டு ஒரு க்ஷணமும் பிரிந்தது கிடையாது. க்ராமத்திற்கு எழுந்தருளினாலும் கூடவே கடத்தி யழைத்துப் போவர். முதன் முதலாக ஸ்தோத்ரங்கள் கற்பிக்கையில் ஹயக்ரீவ

ஸ்தோத்ரம் தொடங்கி தேசிக ஸ்தோத்ரங்களையே சந்தை சொல்லிவைத்தார். ஆளவந்தார் ஆழ்வான் பட்டர் ஸ்தோத்ரங்களையெல்லாம் பிறகுதான் கற்பித்தார். அக்காலத்தில் தேசிக ஸ்தோத்ரங்கள் அச்சேறியிருக்கவில்லை. தம்முடைய மனப்பாடங்கொண்டே எனக்கு எழுதிக்கொடுத்துக் கற்பித்தார். (ஓலையேடு இருந்ததுண்டு.) அவற்றை மிக்க இளமையில் கற்றபடியால் இப்போதும் [ப்ரசாரமில்லாவிடினும்] அவை எனக்கு உறுதியாயிருக்கின்றன. அந்த காலத்தில் தேசிக ஸ்தோத்ரமறிந்த வடகலையார் மிகச் சிலரேயிருப்பர். இல்லையென்றே சொல்லலாம். கோவில் சண்டைக்காக வரதராஜ பஞ்சாசத்துமட்டும் தெரிந்தவர்கள் சிலர் இருந்தார்கள். அக்காலத்தில் தென்கலையார் வடகலையார் எல்லாரும் வ்யவஹரிப்பது வேதாந்தாசாரியர் என்றே யல்லது தேசிகன் என்கிற வ்யவஹாரம் அப்போது தலையெடுக்கவில்லை. "ரங்காசார், ராகவாசார் என்கிற மாதிரி வேதாந்தாசார் என்பதோ?" என்று பிற்காலத்தில்தான் நவீன வகுப்பினர் தேசிகனென்று வழங்கத் தலைப்பட்டனர். இதைப்பற்றி இங்கு நான் க்ரந்தவிஸ்தரம் செய்ய விரும்பவில்லை. ஒன்றே கேண்மின். ஸ்வாமி அதிகரணஸாராவளியின் தொடக்கத்தில் "ஸ்ரீமத்ப்யாம் ஸ்யாதஸாவித்யநுபதி வரதாசார்ய ராமாநுஜாப்யாம்" என்கிறார். ப்ராசார்யரான நடாதூரம்மாளை வரதாசார்யரென்றும் ஸ்வாசார்யரை ராமாநுஜரென்றும் நிர்தேசிக்கிறார். சுலோகமாகையாலே இப்படி ஸாதிக்க நேர்ந்ததென்று எண்ணிவிடலாம். ரஹஸ்யக்ரந்தங்களில் ரங்காசார் ராகவாசார் என்கிறாப் போலவே வரதாசார் என்னலாமா? ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாத்யோபாய சோதநாதிகாரத்தில் அம்மாளை வரதாசார்யரென்றே நிர்தேசிக்கிறார். அந்யத்ரவும் அம்மாளென்று குறித்திலர். வேதாந்தாசார்யரென்பது ஸ்வாமிக்குப் பட்டமாகக் கிடைத்த திருநாமமாகையாலே மிகச் சிறந்தது. வரதாசார்யரென்பது போலன்று. வேதாந்தாசார்யரென்று வழங்குவது கௌரவமேயல்லது லாகவமன்று. ஆயினும் நவநாகரிகத்தில் நவீனர்கள் (1900க்குப் பிறகு) இதை இழிவாக நினைத்துவிட்டார்களாதலால் அக்ஷரஸம்க்ஷேபத்தையுமுத்தேசித்து நாமும் தேசிகனென்றே வழங்குவதாகக் கொள்க. ப்ராஸங்கிகமிது.

திருத்தகப்பனார் வேதாந்தாசார்ய விக்ரஹம் எழுந்தருளப்பண்ணித் திருவாராதனத்தில் கொண்டிருந்தவர். இப்போதும் ஆராத்யமதே. இரண்டு மூன்று ஸம்வத்ஸரங்களுக்கு முன்பு "விதுரஸ்ய யயௌ வேச்ம" என்ற கணக்கிலே நிர்ஹேதுக க்ருபையடியாக ஒருநாள் அடியேனுடைய குடிசைக்கு ஸபரிவாரராக எழுந்தருளின ஸ்ரீமத் பரமஹம்ஸ. முக்கூர் அழகியசிங்கரும் அந்த திருக்கோலத்தை ஸேவிக்க விரும்பி ஸேவித்து 'தென்கலைத் திருமண்காப்பு சாத்தியிருக்கிறாப்போலிருக்கிறது' என்று புன்முறுவலோடு ஸாதித்தார். இதுவும் ப்ராஸங்கிகம். திருத்தகப்பனார் ப்ரஸ்தாவம் இங்கு எதற்காக எடுத்தேனோ அதை விஜ்ஞாபிக்கிறேன்.

இப்போது நடைபெறும் ஸ்ரீ 1968. திருத்தகப்பனார் திருவவதாரம் ஸ்ரீ 1860. அவருடைய திருத்தகப்பனார்க்கு நால்வர் ஸஹோதரர்கள். ஒருவர் ப்ரஹ்மசாரியாகவேயிருந்து மறைந்தார். இருவர் திருப்பதியில் ப்ரதிவாதிபயங்கரத் திருமாளிகைகள் இரண்டுக்கு ஸ்வீக்ருதர்களாகச் சென்றனர். அவ்விருவர்க்கும் ஸந்தான பரம்பரை திருப்பதியில் விளங்கிவருகின்றது. அவ்விரண்டு திருமாளிகைகளிலும் 'வேதாந்தாசார்ய' நாமதேயம் இற்றைக்கும் தொடர்ந்து வந்துகொண்டிருக்கின்றது. அதில் ஒரு

திருமாளிகைக்காரர்க்கு ஹைதராபாத் நகரத்திலும் அதைச்சார்ந்த பல ஊர்களிலும் நெடுநாளாகவே சிஷ்யவர்க்கங்களுண்டு. ஏறக்குறைய 175 வருஷங்களுக்குமுன்பிருந்த (திருப்பதி) அண்ணா வேதாந்தாசார்ய ஸ்வாமியென்பவர் ஹைதராபாத் நகரத்தில் கௌளீபுரம் தரவாஜாவுக்கருகில் கந்திகல்மெட்டு என்று நாளைக்கும் ப்ரஸித்தமாக வழங்கி வருமிடத்தில் தம்முடைய மஹாதனிக சிஷ்யனான கொம்பல்லி ராமசந்திரராவ் என்பவருடைய வேண்டுகோளுக்கிணங்கி சக்ரவர்த்தி திருமகன் ஸந்நிதி நிர்மாணம் செய்வித்தார். இந்த ஸந்நிதியில் ஆழ்வாராசாரியர்களில் ஒருவர் தப்பாமல் எல்லாரையும் ப்ரதிஷ்டை செய்வித்துள்ளார். வேதாந்தாசார்யரும் இங்கு எழுந்தருளியிருக்கிறார். இந்த ஸந்நிதியில் இப்போதைக்கும் நம் தேசத்து ஸ்வாமிகளின் திருவாராதனமே நடந்து வருகிறது. வேதாந்தாசார்யருடைய திருநக்ஷத்ர பரிபாலனங்களும் குறையற நடந்து வருகிறது. மேற்செய்தியைக் கேண்மின்.

அந்த ஹைதராபாதிலேயே ஸீதாராம்பாக் என்ற ப்ரஸித்தமான விடத்தில் ஸ்ரீமதுபயவே. காரணே பிரதிவாதிபயங்கரம் (ஆத்ய) அனந்தாசாரியர் ஸ்வாமி (நெடுநாள் முன்பு எழுந்தருளியிருந்தவர்) பூர்ணமல் ஸேட்டுக்கு ஆசார்யராகித் தேவப்பெருமாள் ஸந்நிதி ப்ரதிஷ்டை செய்தருளினார். இந்த ஸந்நிதி மேலே ப்ரஸ்தாவித்த கந்திகல் மேட்டு ஸந்நிதியிற்காட்டிலும் பிரபலமாக விளங்கி வருகிறது. இந்த ஸந்நிதியிலும் வேதாந்தாசார்யரை ப்ரதிஷ்டை செய்ய ப்ரஸ்தாவம் விளைந்தபோது அது தடைபட்டு விட்டது. (காரணமென்னவென்றால்) கந்திகல்மெட்டு ப்ரதிஷ்டைக்கு 40, 50 ஆண்டு கட்குப்பின்பு இந்த ஸந்நிதி ப்ரதிஷ்டை. முந்தின ஸந்நிதி ப்ரதிஷ்டா காலத்தில் வேதாந்தாசார்யரைப்பற்றின போராட்டம் அங்குரித்ததே கிடையாதாம். அப்போதும் வடகலையார்களிருந்தும் அவர்கள் வேதாந்தாசார்யரையோ உடையவரையோ ஆழ்வார் களையோ அறியாதவர்களாகவேயிருந்தார்களாம். அதனால் அப்போது எவ்விதமான கலஹமும் தோன்றியிருந்ததில்லையாம். அதனாலேயே திருப்பதி ப்ரதிவாதிபயங்கர வம்சஸ்தர்கள் எவ்விதமான விசிகித்ஸையுமில்லாமல் வேதாந்தாசார்ய விக்ரஹ ப்ரதிஷ்டையை நடத்தினார்களென்றும், ஸீதாராம்பாக் ஸந்நிதி ப்ரதிஷ்டா காலத்தில் தென்னாட்டில் சில திவ்ய தேசங்களில் நவீனர்களின் போராட்டங்கள் நீதிமன்றத்தளவுஞ் சென்று கடுந்தண்டனைகளும் கொடுங்கட்டளைகளுமாய் ரஸாபாஸமாக இருந்து வந்ததனால் "விலைகொடுத்து வினைவாங்க வேண்டாம்" என்று ஸாதித்தாராம் காரணே பெரிய ஸ்வாமி. அதனால் அங்கும் புஷ்கரத்திலும் வேதாந்தாசார்ய ப்ரதிஷ்டை அவகாச மற்றதாயிற்று. ஸமீப காலத்தில் வாழ்ந்த [அஸ்மதாசார்யரான) காதிஸ்வாமியும் நாம் ப்ரதிஷ்டை செய்வித்தருளின [பனஸவாடி வேங்கடேச்வரமந்திர், மார்வாடம் ரோல்—ஸ்ரீரங்கநாதமந்திர்] ஸந்நிதிகளில் அந்த ஆசாரத்தையே பின்பற்ற நேர்ந்தது. இதை காதிஸ்வாமி திருவாக்கில் பலகால் கேட்டிருந்தேன், ஏற்கெனவே இதை பிரசுரம் செய்துமிருக்கிறேன். இனி, திருத்தகப்பனார் காலத்தில் அடியேன் கேட்டவற்றையும் கண்டவற்றையும் தெரிவிக்கிறேன்.

திருத்தகப்பனாரை நேரில் ஸேவித்தவர்கள் தற்காலம் ஸ்ரீஉ.வே. திருமலையீச்சம்பாடி வரதாசாரியர் ஸ்வாமியொருவரேயுளர். இவர் என்னைவிட நான்கு பிராயம் மூத்த வராதலால் தமது பதினெட்டு பிராயம்வரையில் திருத்தகப்பனாரை ஸேவித்திருக்கக்கூடு

மென்று நினைக்கிறேன். காஞ்சீவாஸிகளில் மற்று எவரும் எனது நினைவுக்கு வரவில்லை. அவரை ஸர்வபூதஸுஹ்ருத்தென்பர்கள். ஸ்மார்த்த மாத்வர்களுமுட்பட அக்காலத்தில் காஞ்சியிலுள்ளவர்கள் பெரும்பாலும் திருத்தகப்பனாரிடம் கல்வி பயின்றவர்கள் என்பதை நேரில் அறிவேன். இரண்டொரு ஸம்வத்ஸரம் திருமாளிகையைவிட்டுப் பெயர முடியாமல் வானமாமலை மடத்து வித்யாசாலையின் சில வகுப்புகளை ஸ்வக்ருஹத்திலேயே நடத்திவந்தாரென்பதைத் தன்சரிதையில் விரிவாக விளக்கியிருக்கிறேன். அக்காலத்தில் பல பெரியார்கள் திருத்தகப்பனார்க்குப் பரம ஆப்தர்களாயிருந்தனர். வடகலையார்களில் ஸ்ரீஉ.வே. அளவூர் க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி, தன்றி பட்டண்ணுதாதாசாரியர் என்னுமிருவரும், தென்கலையார்களில் ஸ்ரீஉ.வே. திருமலையீச்சம்பாடி ரங்காசாரியர் ஸ்வாமி, வானமாமலை சிங்கராசாரியர் ஸ்வாமி என்னுமிருவரும் மிகவுமதிகமாக நெருங்கிப் பழகினவர்களென்பதை ஏழு வருஷ காலம் அநுபவித்திருந்தவனடியேன்.

மேலே குறித்தவர்களில் அளவூர் க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமியென்பவர் திருத்தகப்பனாரோடு ஸஹாத்யாயியாக இருந்தவரென்று கேள்வி. அந்த ஸ்வாமிக்கு தர்ம சாஸ்த்ரத்தில் மட்டும் வ்யாஸங்கம் அதிகமாயிருந்தது. திருத்தகப்பனார் திருநாடலங்கரித்த பிறகும் ஏறக்குறைய பதினைந்திருபது வருஷகாலம் அந்த ஸ்வாமி ஜீவித்திருந்தார். நல்ல சிஷ்டர். வம்புதும்பு வியாபாரங்களில் த்ரிகரணத்தாலும் ப்ரவேசித்தவரல்லர். இந்த ஸ்வாமியை நன்கறிந்தவர்கள் இப்போதும் காஞ்சியில் பலருளராதலால் இவரைப் பற்றி இங்கு நான் அதிகமாக எழுத விரும்பவில்லை. இந்த ஸ்வாமியை அடியேன் இங்கு ப்ரஸ்தாவித்ததன் காரணத்தை சற்றுப் பொறுத்து மேலே விவரிக்கிறேன்.

தென்னாசார்ய தர்சனஸபை என்பது காஞ்சியில் நெடுநாளாகவுள்ளது. திவ்ய தேசங்களில் வடகலையார்களின் விஷமசேஷ்டைகள் தொடங்கினகாலத்தில் மேலே கண்ட பெயர்பூண்ட ஸபை சில திவ்யதேசங்களில் நிறுவப்பட்டதாம். காஞ்சியில் ஸ்தாபிக்கப்பட்ட ஸபை (Registered) இற்றைக்கும் பணியாற்றிவருகின்றது. பெரிய காஞ்சீபுரத்திலுள்ள உலகளந்த பெருமாள் ஸன்னிதி, வைகுண்டநாதன் ஸன்னிதி, பாண்டவதூதன் ஸன்னிதி, விளக்கொளி ஸன்னிதி .. இவற்றில் தினப்படி மாலை வேளையில் நித்யாநுஸந்தான ஸேவைக்காக தேவப்பெருமாள் ஸன்னிதியத்யாபகர்களில் சிலர் [யுவாக்களாகவுள்ளவர்கள்] முறைவட்டமாகச் சென்றுகொண்டிருந்தார்களாம். தீபப்ரகாசன் ஸன்னிதியிலும் வேதாந்தாசாரியர் திருமண்டபத்திலும் திருத்தகப்பனார் பலவாண்டுகள் நித்யாநுஸந்தான ஸேவைக்குச் சென்றுகொண்டிருந்தார். திருமேனியில் அசக்தியினாலே சிலகாலம் திருநக்ஷத்திரங்களுக்குமட்டும் போய்வருவதென்று வைத்துக் கொண்டிருந்தார். அவர் அடிக்கடி ஸாதித்துக்கொண்டிருந்ததென்னவென்றால், விளக்கொளி ஸன்னிதியில் முதன்முதலாக ராமாநுஜாபாத்ரக் கிளர்ச்சி ஏற்பட்டதே யொழிய, தென்கலைத் திருமணைமாற்றவேணுமென்கிற கிளர்ச்சி வெகுகாலம் வரையில் ஏற்படவேயில்லையென்றும், தம்முடைய பதினான்கு பிராயத்திற்குமேல்தான் புண்ட்ரத்தை மாற்றவேணுமென்கிற கிளர்ச்சி ஏற்பட்டதாகவும், தாம் இளமையில் தம்முடைய திருத்தகப்பனாரோடுகூட விளக்கொளி ஸன்னிதிக்குச் செல்லுங்காலங்களில் புண்ட்ர ஸந்நிவேசத்தில் எவ்விதமான மாறுபாடுமில்லாமலே பலகால் ஸேவித்ததாகவும், வடகலையார்க்குள்ளும், விளக்கொளி ஸன்னிதிக்கு தர்மகர்த்த பரம்பரையினரான

கைக்கோளர்களோடும் ஏற்பட்ட வ்யாஜ்ஜியங்களினால் வேதாந்தாசாரியர் ஸன்னிதி பல வருஷங்கள் திறக்கப்படாமல் மூடப்பட்டேயிருந்ததாகவும், முதன் முதலாக அந்த நிலைமைதான் தமக்குத் தெரிந்ததாகவும் பலகால் ஸாதிக்கக் கேட்டிருக்கிறேன். இதையெல்லாம் சிறுவனான அடியேனிடம் ஸாதிக்க ப்ரஸக்தியில்லை; சில பெரியார்களோடு அவர் ஸம்பாஷிக்கையில் செவிப்பட்ட விஷயங்கள் அடியேனுக்கு ஒன்பது பத்து பிராயத்திலிருந்தே நினைவு. இச்செய்திகள்மட்டுமன்று; அவர் க்ரந்தங்களில் வார்த்தையாடும் விஷயங்களும் பெரும்பாலும்.

கீழண்டை மாடவீதியில் ஈச்சம்பாடி விஜயராகவாசார்ய ஸ்வாமியென்று ஒரு பெரியவர் எழுந்தருளியிருந்தார். அவரை அடியேன் க்ருஹஸ்தாச்ரமத்தில் ஸேவிக்கப் பெற்றதில்லை. உத்தமாச்ரமியாயெழுந்தருளியிருந்த காலம் நன்கறிவேன். அடியேனுடைய பதின்மூன்றுவது பிராயத்தில் அந்த ஸ்வாமி திருநாடலங்கரித்தார். அவரைப்பற்றின ஓர் ரணரணகஜனகமான இதிஹாஸத்தைப் பிறகு பலர் மூகமாகக் கேட்டிருந்தாலும் முதன் முதலாகத் திருத்தகப்பனார் திருவாக்கில் கேட்டிருந்தேன். அந்த ஸ்வாமி தாம் வேதாந்தாசாரியர் ஸன்னிதி பூட்டு சாவியை வைத்துக்கொண்டிருந்தவர். எண்பது திருநக்ஷத்திரம் வாழ்ந்திருந்த அவர் இருபது பிராயம் முதல் எழுபது பிராயம் வரை வேதாந்தாசார்ய ஸன்னிதி பரிபாலனத்திலேயே ஊன்றியிருந்தவர். [பத்து ஸம்வத்ஸரம் உத்தமாச்ரமியாயெழுந்தருளியிருந்தார்.] இந்த ஸ்வாமி, ஆங்காங்கு திருமாளிகைகளில் நடைபெறும் ஹவ்யகவ்ய ஸமய விசேஷங்களில் "வேதாந்தாசாரியர் தக்ஷிணை" என்று வாங்கியும் திருவோணந்தோறும் புட்டுக்கூடையையெடுத்துக் கொண்டு இங்கு மாட வீதிகளிலும், ஸ்ரீ யதோக்தகாரி அஷ்டபுஜ வீதிகளிலும் அமுதுபடி வியாபரித்து விளக்கொளியில் திருநக்ஷத்ர கோஷ்டிபரிபாலனம் செய்துவந்தவரென்பதை இற்றைக்கும் பலர் கூறுவர்.

இந்த ஸ்வாமி ஒருநாளிரவு வழக்கப்படி வேதாந்தாசார்ய ஸன்னிதியைப் பூட்டிக் கொண்டிருக்கையில் வீரசூரர்களான சில வடகலையார் வந்து பலாத்காரமாகச் சாவியைப் பறிக்கையில் மஹாபலிஷ்டரான இவரும் விடாமல் வெகுநாழிகை போராடினரென்றும், இவருடைய திருக்கைகளைச் சம்மட்டிகொண்டடித்து கனத்தபாதையை உண்டாக்கின வள்வில் ஜடாயுமஹாராஜர்போல் தம்மாலும் வேதனை தாங்க முடியாமல் நிலத்தில் விழுந்து வெகுநாழிகை சைதன்யமற்றிருந்து, அடுத்த வடகலையார்களாலேயே நடுநிசியில் திருமாளிகையில் கொண்டு சேர்க்கப்பட்டாரென்றும் ப்ரஸித்தமான விஷயம். 1874-ஆம் ஆண்டுவரையில் விளக்கொளி வேதாந்தாசாரியர் தென்கலைத் திருமண் காப்பில் சிறிதும் விபர்யயமடையாமலே திகழ்ந்தாரென்பதை தீபப்ரகாசனுடைகூடவே வேதாந்தாசார்யரையும் சேர்த்து எடுத்திருக்கிற படங்கொண்டு உலகமறிந்திருக்கின்றது. இந்த படம் ஸேவாபத்ரிகையில் வடகலையார்களே வெளியிட்டது. நாமும் 1—1—55ல் வெளியிட்ட ஸம்ப்ரதாய ப்ரதீப விமர்சத்தில் பக்கம் 7ல் அந்த பக்கம் நிறைய வெளியிட்டிருக்கிறோம்.

விளக்கொளி ஸன்னிதியில் நூதனமாகப் புகுத்தப்பட்ட ராமாநுஜாபாத்ரம் அகன்றதேயொழிய, அதேபோல் நூதனமாகப் புகுத்தப்பட்ட வடகலை நாமம் ஏன் அகலவில்லை? என்று ஒரு கேள்வியெழும். கேண்மின். கள்ளர்கள் களவு செய்யப் புறப்படும்போது வழியிடையில் விநாயகர் கோவிலில் பிரார்த்தனை செய்துகொள்ளுவர்

களாம்; விசேஷமான பொருள்கள் கிடைக்கவேணுமென்றும், களவில் பிடிபடாமலிருக்க வேணுமென்றும் [காணிக்கைகள் செலுத்தியோ செலுத்துவதாகச் சொல்லியோ] பிரார்த்தனைகள் நடைபெறும். தெய்வவசமாகப் பிரார்த்தனை பலித்தும்விடலாம். பிறகு பொருள் இழந்தவரும் இஷ்டதேவதா ப்ரார்த்தனை செய்துகொள்வர்; அந்த ப்ரார்த்தனை பலிப்பதுமுண்டு; பலிக்காமலே போவதுமுண்டு. இதற்குச் சான்றாக வேதத்திலிருந்தும் ஒன்று காட்டுகிறேன். அபிசாரமென்று ஒரு கர்மம்; அதாவது சூன்யம்வைத்தல். அதைச் செய்ய நினைப்பவனுக்கு உபாயம் சொல்லிக்கொடுப்பன் வேதபுருஷன். சூன்யம் வைப்பவனுக்கு 'அபிசரந்' என்று பெயர்; "ஆக்நாவைஷ்ணவ மேகாதசகபாலம் நிர்வபேத் அபிசரந்' என்று அவனுக்கு ஒரு இஷ்டியைக் காட்டிக்கொடுக்க, அதை அவன் அனுஷ்டித்துவருகிறான். சூந்யம் வைக்கப்படுகிறவன் ஒருவனுண்டே, அவன் முறையிட்டால் அவனுக்கும் உபாயம் காட்டிக்கொடுக்கிறான் அந்த வேதபுருஷன்தானே. என்ன காட்டிக்கொடுக்கிறான் தெரியுமோ? *ஏதயைவ யஜேத அபிசர்யமாண:* என்று, பகைவனுக்குக் காட்டிக்கொடுத்த இஷ்டியையே இவனுக்கும் உபாயமாகக் காட்டிக்கொடுக்கிறான். எது பலிக்கிறது? என்று பார்த்தாலோ, இரண்டும் பலிக்கலாம்; இரண்டும் பழுதுபடலாம். இரண்டிலொன்று பலிக்கலாம். இதைப்பற்றின விரிவு இங்கு வேண்டா. தேவப்பெருமாள் ஸன்னிதியில் உயிர்யானையின் திருமண்காப்பு வழக்கு நெடுநாளாகத் தொடர்ந்து நடந்துவந்து ஸமீபகாலத்தில் [செங்கற்பட்டு நீதிமன்றத்தில்] முடிவு பெற்றிருப்பது உலகம் பரவியதன்றோ. அந்த முடிவின்மேல் அப்பீல் செய்யப்படுமென்பதிருக்கட்டும. கனம்பொருந்திய மேதாவியான ஓர் அதிகாரி புண்ட்ரவிஷயத்தில் விஷமிகள் செய்து போந்த விஷமச் செயல்களை 49 பக்கங்கொண்ட ஜட்ஜ்மெண்டினால் அலசியலசி விவரித்திருக்கும் பரிசை உலகம் காணப்போகிறது ஸ்ரீ ராமாநுஜன் மூலமாகவே. அப்பீல் முடிவு எப்படியாவது ஆகுக. மத்யஸ்தரான ஓர் அதிகாரி சோம்பாது ஸகல ரிகார்டுகளையும் ஆராய்ந்து உண்மையைக் கண்டறிந்து கையிலங்கு நெல்லிக்கனியெனக் காட்டியிருப்பது மற்றும் பல தேவாலயங்களிலும் நடந்த புண்ட்ர விஷமச் செயல்களுக்குக் கைவிளக்காகவன்றோவுள்ளது. இது நிற்க.

ப்ரக்ருதம் "ப்ரபல ஸந்தேஹ பரிஹாரம்" என்று மகுடமிட்டு நாம் எழுதிவரும் இக்கட்டுரையில் மேலே விவரித்த விஷயங்கள் நாம் பரிஹரிக்க விரும்பிய ப்ரபல ஸந்தேஹத்திற்குப் பரிஹாரகங்களாக ஆகமாட்டாவாயினும் வேதாந்தாசார்யருடைய திருவவதாரஸ்தலத்தின் யதார்த்தமான நடவடிக்கைகள் உலகுக்குத் தெரிந்திருக்க வேண்டியது அவசியம் என்று கருதி விவரித்தபடி. இதே ஸமயத்தில் ஸ்ரீ யதோக்தகாரி ஸன்னிதி தர்மகர்த்தாவான ஸ்ரீமான் உவே நல்லப்பா. ஜீயப்பங்கார் ஸ்வாமியின் கட்டுரையொன்று ஸ்ரீராமாநுஜனில் வெளியிடப்படவேணுமென்கிற கோரிக்கையுடன் நம்மிடமனுப்பப்பட்டுக் கிடைத்தது. அடுத்தபடியாக அச்சிடப்படும் வியாஸம் அதுவே. அதனால் பல உண்மைகள் நீதிமன்றத்து ரிகார்டுகள் மூலமாக விசதமாகுமாதலால் இனி ப்ரதான ஸந்தேஹபரிஹாரத்தில் ப்ரவர்த்திக்கிறேன். வேதாந்தாசார்யருடைய பரிஸ்திதி ஸர்வாத்மநா தங்களுக்கு எதிரிடையானதென்று நன்கு தெரிந்துவைத்தும் அவரைத் தங்களுக்கு ஆசார்யராக எப்படிகொண்டார்கள்? என்பதுதானே ப்ரபல ஸந்தேஹம். இதற்குக் கேண்மின்.

கீழே அடியேனுடைய திருத்தகப்பனுர்க்குப் பரமஸ்நிக்தர்களென்றும், பல்காலும் நம்முடைய க்ருஹத்திலேயே போதுபோக்கினவர்களென்றும் தெரிவிக்கப்பட்ட அளவூர் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியும் தண்ட்ரி பட்டண்ணுதாதசார்யரும் பன்முறையும் பேசிக்கொண்டிருந்த விஷயங்களை விஜ்ஞாபிக்கிறேன். "நவீனர்கள் வகுப்பில் இரு நூறுண்டுகட்குமுன்பு தேசிகனைப்பற்றியோ ராமாநுஜரைப்பற்றியோ ஆழ்வார்களைப் பற்றியோ ப்ரஸ்தாவித்தெழுதியிருந்த க்ரந்தசகலமாவது காட்டிவிட்டால் நான் அடிமைப் படுகிறேன்" என்று பலகால் நான் செய்யும் சபதம் அந்த ஸ்வாமிகளிருவருடைய திருவாக்கை அவஷ்டம்பமாகக்கொண்டுதான். இதை அளவூர் க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி அழுத்தம் திருத்தமாகச் சொல்லுவர். நவீனவகுப்பினர் பரம வைதிகர்களாம். நெருப்பையும் அலம்புகிறவர்களாம். அதனுல் ஜகன்ய ஜாதீயர்களையும் அவர்களுடைய ப்ரபந்தங்களையும் அவர்கள் பாடின ஸ்தலங்களையும் தாங்கள் விரும்புகிறவர்களல்ல ரென்றும், அப்படி விருப்பின ஆசார்ய பரம்பரையில் தங்களுக்கு ப்ரதிபத்தி கிடையா தென்றும், தென்கலையார்கள் கோவில்களை ஏகதேசமாகக் கொள்ளைகொண்டு அநுபவிப்பது பொருமல் தாங்களும் தேவாலயங்களிலே ப்ரவேசிக்க விரும்பி, தங்களுக் கென்று அஸாதாரணமாக ஓர் ஆசார்யனைப் பிடித்துக்கொள்ளவேண்டி, அக்காலத்தில் தென்கலையார் தேசிகனிடத்தில் விசேஷப்ரதிபத்திகொள்ளாமலும் அவருடைய ரஹஸ்ய க்ரந்தங்களை ப்ரவசனத்தில் கொள்ளாமலுமிருந்ததையே பெரிய காரணமாகக்கொண்டு, தேசிகன் பெரிய வித்வானுகையாலே அவரைக் குருவாகப்பற்றிக் கொள்வதே பாங்கென்று துணிந்து, பரம்பரை ஸ்ரீவைஷ்ணவர்களோடு ஒத்துழைக்க முடியாமல் வேறு பத்ததிகளை ஸ்ருஷ்டித்துப் புகுந்ததில் பாலகாண்டமே யுத்தகாண்டமாக முடிந்தது—என்று அந்த அளவூர் ஸ்வாமி ஸாதிக்கக் கேட்டுக்கேட்டு என்காது ஓட்டையாய்விட்டது. வேதாந்தா சார்ய ரஹஸ்யங்களில் தென்னுசாரியர்களுக்குக் கண்டனமிருப்பதாக எண்ணுவதற்கு ஆஸ்பதமிருப்பதனுலும் நவீனர்கள் அவரைப் பற்றிக்கொண்டார்களென்பது ஸாரமானது.

## ஸ்ரீமான் D. T. தாதாசாரியார் வெளியிட்டிருக்குமுண்மைகள்

"என்றைக்கோ பரமபதித்த அளவூர் ஸ்வாமியும் மற்றொருவரும் ஸாதித்ததிருக் கட்டும். மறைந்துபோன அவர்களைப்போல் வாயால்மட்டும் சொல்லி நில்லாமல் எழுதி அச்சிட்டுமிருப்பவர் இற்றைக்கும் வாழ்பவரான ஸ்ரீமான் D. T. தாதாசாரியார். அவரெழுதியிருப்பதையே எடுத்துக் காட்டுகிறேன்—அவரெழுதி அச்சிட்டு வெளியிட் டுள்ள ஸம்ப்ரதாய ப்ரதீபமென்கிற வடமொழிச் சுவடியில் 69, 70 முதலான பக்கங்களில் உண்மையான விஷயங்கள் பல வெளிவந்திருக்கின்றன. கேளுங்கள்; (1) "கலியின் கொடுமையினுல் திவ்யதேசங்கள் அவைதிகர்களான ஏகதேசிகளின் ஆளுகையிலே இருக்கின்றபடியால் அதனுல் கெட்டுப்போன கோவில்களைக் கண்ணெடுத்தும் பாராம லிருப்பதுதான் ஸாத்விகர்களுக்கு உற்றது. ஆனுலும் ப்ரதிபக்ஷிகளான இந்த ஏகதேசிகள் கோவில்களில் அதிகமான மரியாதைகளை அநுபவித்துவருவதால் அதுகண்டு ஆறியிருக்க மாட்டாமல் கோவில்களிலே நாமும் புகுந்து கலஹம் பண்ணவேண்டியதாயிற்று; இதைப் பற்றி நமக்கு வருத்தமே" (2) "தேசிகபாத்ரத் தனியனைச் சொல்ல வடகலையார்க்கு ஹக்கு இருக்கத்தானிருக்கிறது. இல்லாமற்போகவில்லை. ஆனுலும் வடகலையார்கள்

பரம ஸாத்விகர்களாகையாலே சாந்தியில் விருப்பினுலும் கலஹத்தில் வெறுப்பினுலும் அந்த பாத்திரத்தைச் சொல்ல முயற்சி செய்யவில்லை."

(3) மிகவும் ஸாரமாக எழுதியிருப்பது கேளீர். (அந்தச் சுவடியில் பக்கம் 69ல் ப்ரதிவசனகாண்டம் 49-ல்.) "அநாதியாக வடகலையாயிருந்த கோவில்களையெல்லாம் தென்கலையாக ஆக்குவதே தொழிலாயிருந்த தென்கலையார்களாலே நெடுநாளைககு முன்னமே ஆக்ரமிக்கப்பட்டு அவைதிகங்களாய்க்கிடந்த கோவில்களை மறுபடியும் வடகலையாக்க வேண்டியது யுக்தமேயன்றோ. விளக்கொளி ஸன்னிதியானது வெகு காலமாக அவைதிகமாய்க்கிடந்தது. அதை வைதிகமாக்க ஸ்ரீமத்திருப்புட்குழி ஸ்வாமி அக்கறைகொண்டார். அவர் செய்த உபாயம் பலித்துவிட்டது. லோகக்ஷேமத்திற்காக இப்படிச் செய்ய வேண்டியதுதானே. ஆஸ்திகர்களுக்கு இது கடமைதானே." என்பதாம். அநாதியாக வடகலையாயிருந்த கோவில்களை நெடுநாளைக்கு முன்னமே தென்கலையாக்கினது உடையவரும் கூரத்தாழ்வானும் சேர்ந்து—என்று இந்த கெட்டத்தில்தான் எழுதி முடித்திட்டார் ... ... ...

# ஓய்வில்லாத உழைப்புகள்

## காசுக்குதவாத களேபரங்கள்.

உலகில் பல கொண்டாட்டங்கள் பலவிடங்களில் பலரால் நிகழ்த்தப்படுவதுண்டு. வெள்ளிவிழாக் கொண்டாட்டம், தங்கவிழாக் கொண்டாட்டம், வயிரவிழாக் கொண்டாட்டம், நூற்றாண்டு கொண்டாட்டம்......என்னுங் கொண்டாட்டங்களெல்லாம் லௌகிகர்கள் நடத்தும் முறை வேறு, வைதிகர்கள் நடத்தும் முறை வேறு. லௌகிகர்கள் ஆங்கில வருஷத்தைக்கொண்டு நடத்துவர்கள். வைதிகர்கள் ப்ரபவாதி ஸம்வத்ஸரத்தை முதலிட்டே நடத்துவர்கள். இதில் யார்க்கும் விவாதமில்லை. முதன் முதலாக அப்தபூர்த்தி மஹோத்ஸவமே ப்ரபவாதி ஸம்வத்ஸர முறையில்தான் நடத்தப் பட்டுவருகிறது. இதை நெஞ்சில் திடமாகக்கொண்டு மேல் விஷயத்தைக் கவனியுங்கள்.

நம் வேதாந்தவாசிரியர் திருவவதரித்த வருஷம் ஊசலாடிக்கொண்டிருக்கிறது. ப்ராமாணிகரான (வைகுண்டவாஸி) ஸ்ரீமத் பரமஹம்ஸ. இஞ்சிமேட்டழகியசிங்கர் சுக்ல வருஷத்தில் அவதாரமென்பதற்குத்தான் ப்ரமாணம் கிடைக்கிறதென்றும், விபவ வருஷத்தில் அவதாரமென்று கேள்விமட்டுமே யுள்ளதென்றும், (சுக்லவர்ஷே) என்பதற்கு லக்ஷணயா விபவவர்ஷே என்று அர்த்தங்கொள்ளலாமென்றும் தாம் எழுதிய தத்வடீகா பூமிகையில் விளக்கியுள்ளாரென்பதை நற்பொருளெழுநூறின் ஆருவது நூறில் பாரா 581ல் விவரித்திருக்கிறேன்.

ஒரு பெரிய ஆசார்யருக்கு அவதார வருஷத்தில் விவாதமோ விப்ரதிபத்தியோ விளைவதென்பது ஸர்வாத்மநா அஸம்பாவிதம். கூரத்தாழ்வான் எம்பார் பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை போல்வாரான ஆசாரியர்களை யெடுத்துக்கொண்டு இவர்கள் எந்த வருஷத்தில் அவதரித்தார்கள்? என்று கேட்டால் ஞாபகம் வைத்துக்கொண்டு சொல்லுவார்

இல்லாமற்போனாலும் எழுதிவைத்திருப்பதில் ஒரு விவாதமும் கண்டதில்லை. மணவாள மாமுனிகள் ஸாதாரண ஸம்வத்ஸரத்தில் அவதரித்தருளினாரென்பதை அக்காலத்து ஆசாரியர்களே ச்சந்தோபத்தமாக்கியிருக்கின்றார்கள். எம்பெருமானார்க்குமப்படியே. கிம்பஹுனா? ஒரு ஆசார்யருடைய திருநாமத்தைச் சொல்லி இவர் எந்த வருஷத்தில் அவதரித்தார்? என்று ஒரு பெரியவரைக் கேட்டால் 'தெரியாது, கவனித்ததில்லை' என்பர் சிலர்; சிலரோவென்னில், நிஸ்ஸம்சயமாகவும் நிர்விவாதமாகவும் நிஷ்கர்ஷமாகச் சொல்லுவர். இங்ஙனன்றிக்கே விவாதத்தில் வந்து விழுந்தால் என்ன நிச்சயிக்கவேண்டும் தெரியுமோ? மீண்டுமீண்டும் நாம் சொல்லவேணுமோ அதை? நவீனர்களென்று தாங்கள் பெற்றிருக்கும் வ்யபதேசத்தை தாங்களே நிலைநாட்டிக் கொள்ளுகிறார்களத்தனை.

இங்ஙனே புதுத்தெய்வம் கொண்டாடத் தொடங்கினது எதற்காகவென்னில், திவ்யதேசங்களில் வீண்கலஹங்களை யுண்டுபண்ணுவதற்கேயென்பதை அறியாதாருளரோ? உண்டுபண்ணின வீண் கலஹங்களினால் ஏற்பட்ட வீண் பணச்செலவுகள் எவ்வளவு தெரியுமோ? அதிசயோக்தியில்லாமல் சொல்லுகிறேன்—ஸ்ரீரங்கம்போல் ஒரு பெரிய தேவஸ்தானம் நிருமிப்பதற்குப் போதுமான பணமென்னத்தட்டில்லை. எவ்வளவும் போராடட்டும்; தோல்விகளுக்குச் சளைக்காமல் மேன்மேலும் போராடட்டும். ஒரு ரூபாய் கேட்கப் பத்து ரூபாய் கொடுக்கவும், பத்து ரூபாய் கேட்க ஆயிரம் ரூபாய் கொடுக்கவும் சக்தர்களான தனிகர்கள் இருப்பதனாலே பணச்செலவுக்குப் பின்வாங்க வேண்டியதில்லை. ஆனால் செய்யும் காரியங்கள் ஆத்மத்ருப்தியையாவது விளைக்க வேண்டுமே. அதை நவீனர்களின் உள்ளமே உணரும்.

பகவத் ராமாநுஜருடைய கொள்கை என்ன? என்று கேட்டாலும், பிள்ளை லோகாசார்யர் மணவாளமாமுனிகளின் கொள்கை என்ன? என்று கேட்டாலும் உடனே எடுத்துரைக்கத் தயங்குவாரில்லை. நீங்கள் கொண்டாடும் புதுத்தெய்வத்தின் கொள்கை என்ன? என்று கேட்டால் "முன்னுக்குப்பின் முரண்படப் பேசுவதுதான் முக்கியமான கொள்கை" என்றல்லது வேறொன்றும் பேசுவதற்கில்லையே. கண்கள் சிவந்து முகம் சீறிச்சிவப்பதனால் என்ன பயன்? மற்றெல்லா விஷயங்களையும் விட்டு, பிராட்டி விஷயம் ப்ரபத்தி விஷயம் என்கிற இரண்டைமட்டும் எடுத்துக்கொண்டு பூர்வோத்தர விரோதங்களைப் பரிஹரித்து ஸாதாரணஜ்ஞான முடையவர்களும் தெளிவு பெறும்படி ப்ராமாணிக வித்வான்களைக்கொண்டு எழுதுவித்துப் பிரசுரம் செய்தால் எவ்வளவோ மதிப்பாயிருக்குமே என்பது தெரியவில்லையே. ஏன் தெரியவில்லை? நன்கு தெரிந்துதானிருக்கிறது. சரக்கில்லையே, என்ன பண்ணுவது! என்கிறார்கள் பிராமாணிகர்கள். இந்த அழகுக்கு அச்சுக்கூடங்கள்தோறும் அல்லும் பகலும் உணவு கெட்டு உறக்கங்கெட்டு வெள்ளைக் காகிதங்களையெல்லாம் கறுப்பாக்கிக்கொண்டு கிடப்பதில் என்ன புண்ணியமோ! புருஷார்த்தமோ! தெரியவில்லையே! இந்த ஓய்வில்லாத உழைப்புகளும் காசுக்குதவாத களேபரங்களும் சில பாமரர்களைக்கூட மயக்க மாட்டாவே. பல லக்ஷங்கள் செலவழித்து மண்டபங்கள் கட்டிவிடலாம்; மனத்தில் தோன்றுகிறபடியெல்லாம் செய்து தலைக்கட்டிவிடலாம். எதிலும் அருமையில்லை. பின்னை எதில் அருமை? பகவத் ராமாநுஜதர்சனத்திற்கு எதிராக நவீனர்கள் கொண்டிருக்கும் புதியதர்சனத்தின் உண்மைப் பொருள்களை உலகறியச் செய்வதே அரிது அரிது! பெரிதுமரிது!! ... ... ...

ஸ்ரீ

# ஸ்ரீதேசிகனின் ஆறுவது நூற்றுண்டுவிழா

**இதாரத்னம். நல்லப்பா. ஜீயப்பங்கார். (சின்ன காஞ்சீ. ஆனைகட்டி வீதி.)**

ஸ்ரீதேசிகரின் 600வது திருநக்ஷத்திர விழாவை வடகலையார் சென்ற நூற்றுண்டில் கொண்டாடினதுண்டோவென்று சிலர் கேட்க, ஸ்ரீதேசிகனை வடகலையார் வெகு சமீப காலத்திலேயே ஆசார்யனுகக் கொள்ளத் தொடங்கினுர்களென்றும், ஆதிமுதல் இவரைத் தென்கலையாரே தொடர்ந்தாற்போல் கொண்டாடி வந்துள்ளனரென்றும் ஏற்கெனவே காஞ்சி ஸ்ரீ P. B. A. ஸ்வாமி பல நிருபணங்களைச் செய்து ஸ்தாபித்துள்ளார். நீதிமன்றங்களில் நடந்த சில வியாஜ்ஜியங்களும் இதையே ஊர்ஜிதம் செய்கின்றபடியை விளக்குகின்றேனிங்கு.

ஸ்ரீதேசிகனின் அவதாரஸ்தலமாகிய விளக்கொளி திவ்யதேசத்தில், மற்ற திவ்ய தேசங்களிற்போல் தென்கலையாரே அக்கரைகொண்டு அங்கு ஆதிக்யம் பெற்றிருந்தனர். தென்கலை மந்திரமாகிய ஸ்ரீசைலேச தயாபாத்திரமே, பூஜோத்ஸவ காலங்களில் இந்த ஸ்ரீ தேசிகன் ஸந்நிதியிலும் இப்போதுபோல் எப்போதும் ஆசரணையிலிருந்து வந்தது. தென்கலையாரே இந்த ஸந்நிதியில் திவ்யப்ரபந்தானுஸந்தானம் என்னும் விஷ்ணு ஸ்தலங்களின் பிரதானமான கைங்கர்யத்தை ஆதிமுதல் விடாமல் செய்துவருகிறுர்கள். இத்தகைய மாமுல் வழக்கத்தை மாற்ற 19-ஆம் நூற்றுண்டின் தொடக்கத்திலேயே சில வடகலை தாதாசாரியர்கள் ஆரம்பித்தார்கள். இதில் மற்ற பொதுவான வடகலையார் யாதொரு அக்கரையும் கொள்ளவில்லை. சில வடகலை தாதாசார்யர்களே நவீன கற்பிதமான ராமானுஜா பாத்திரத்தை இந்த ஸந்நிதியில் நுழைக்க முயற்சி செய்தார்கள். இந்தத் தனியனைச் சொல்லி சில உத்ஸவங்களையும் நடத்தத் தொடங்கினுர்கள். இதைத் தென்கலையார் பலமாக ஆக்ஷேபிக்கவே அப்போதிருந்த கலெக்டர், மிஸ்டர் ஹாட்ஸன் (Mr. Hodgson) காஞ்சிக்கு வந்து விஷயத்தைப் பூர்ணமாக விசாரித்து புதியதாக ராமானுஜாபாத்திரத்தை இந்த ஸந்நிதியில் சொன்னதற்காக இரண்டு தாதாசாரியர்களுக்கு பத்துபத்து வராகன் (ரூ. 35/-) அபராதம் விதித்தார். 23—2—1799ல் அவர் செய்த இந்த உத்தரவின் சில வாசகங்களைக் கவனிப்போம்.

"I understand that in the Pagoda of Vedantacharyalu near Deepaprakasakala Pagoda, the prayer "Ramanuja dayapatram" has been recited for some days which was never before done .... It is therefore very improper that it should be done so. You (Thasildar) should therefore put a stop to the same, and order the **proper "Sree sailesa dayapatram"** to be recited as usual. For such **improper act** of Ragunadacharyala and Tiruppakudi Krishnamacharyala, among the

Tatachariars and for their having given me the trouble of going and seeing that Pagoda you should levy from them a fine of 10 Pagodas each and send the same.

Poonamallee, 23rd Feb. of Fasli 1208. (Sd) JOHN HODGSON, Collector.

அதாவது, ஸ்ரீ காஞ்சி தீபப்ரகாச ஸ்வாமி கோயிலைச் சேர்ந்துள்ள வேதாந்தாசாரியர் ஸந்நிதியில் சில தினங்களாக, முன்பு எந்நாளும் ஆசரணையில்லாத ராமாநுஜாபாத்திர ஸ்துதியைச் சிலர் சொல்லி வருகிறார்களென்று அறிகிறேன். இது இப்படி நேர்ந்தது வெகு அநீதி. ஆகையால் இதை உடனே நீங்கள் (தாசில்தார்) தடைசெய்து நிறுத்தி, மாமூல்படி ஸ்ரீ சைலேச தயாபாத்திரத்தையே அநுசரிக்கச் செய்யவேண்டியது. தாதாசார்ய வகுப்பைச்சார்ந்த ரகுநாதாசார்யரும் திருப்புட்குழி கிருஷ்ணமாசார்யரும் செய்த இத்தகைய அநீதிச் செயலுக்காகவும், இதற்காக நம்மைக் காஞ்சிக்குப்போய் இந்த கோயிலைப் பார்க்கவேண்டிய தொந்தரவைக் கொடுத்ததற்காகவும், இவர்களிடம் தலா பத்து வராகன் (ரூ. 35/–) அபராதம் விதித்து வசூல் செய்து அனுப்பவேண்டியது—என்று. (இது 5. மதராஸ்கேஸில் தஸ்தாவேஜு 'S' ஆக தாக்கல் செய்யப்பட்டுள்ளது) 10—1—1801ல் கலெக்டர் க்ரீன்வே (Edward Greenway) என்பவர் இந்த விஷயத்தில் பரிபூர்ணமாக ஒரு விசாரணை நடத்தி, கலெக்டர் ஹாட்ஸன் செய்த உத்தரவை ஊர்ஜிதம் செய்து நிறைவேற்றியுள்ளார். பிறகு 1811ல் செங்கற்பட்டு ஜில்லா கோர்ட்டு Civil No. 4134ல் ஒரு வியாஜ்ஜியம் இந்தப் புதுத்தனியன் விஷயமாக நடந்தது. இதிலும் ராமாநுஜாபாத்திரம் பங்கமடைந்தது. இதன்பேரில் தாதாசார்யர்கள் அப்பீல் (A. S. No. 26 of 1812) செய்தார்கள். இதில் அளித்த பெரிய தீர்ப்பின் ஒரு வாக்யத்தை மாத்திரம் இங்குக் காண்போம்.

"Their (the Vadakalai Tatacharis') very pleadings show that the mode of worship which they wish to establish is **an innovation** of which not one out of eighteen Pagodas at Congeeveram furnishes an example."

அதாவது, வடகலை தாதாசார்யர்களின் சொந்த வாதங்களே, அவர்கள் ஸ்தாபிக்கவிருக்கும் பூஜாக்ரமம் (அதாவது) ராமாநுஜாபாத்திரத்தைச் சொல்லி சடங்குகளை ஆரம்பிப்பது) நவீனம் என்று காட்டுகிறது. காஞ்சியிலுள்ள பதினெட்டு விஷ்ணு வாலயங்களுள் ஒன்றில்கூட ஆசாரத்திலில்லாத புதிய அக்ரமம் இது—என்றுள்ளது. இந்த வியாஜ்ஜியத்தில் தாதாசார்யர்கள் தென்கலையாருக்கு நஷ்டஈடு (Damages) கொடுத்ததும் தவிர, அரசாங்கத்துக்கும் 120 வராகன் (ரூ. 420/-) அபராதமும் கட்டவேண்டியதாயிற்று.

மேல் காட்டியபடியே தாதாசார்யர்களின் அக்ரம முயற்சிகளெல்லாம் மேன்மேலும் அடுத்தடுத்தாற்போலவும் பங்கமடைந்தொழியவே, இவர்கள் 1864ல் விளக்கொளி கோயிலின் தர்மகர்த்தாக்களாக விருந்த கைக்கோளவர்களுள் சிலரைக் கைக்குள் அடக்கிக்கொண்டு இந்த தேசிகன் ஸந்நிதியின் தர்மகர்த்ருத்வ மிராசையே (பாதி) சம்பாதித்துக்கொள்ள ஓர் உடன்படிக்கை ஏற்படுத்திக்கொண்டு அக்ரமச்

செயல்களை நடத்த முயன்றார்கள். இதைத் தென்கலையார் பலமாக ஆக்ஷேபித்து மாஜிஸ்ட்ரேட்டிடமும், ஸிவில் கோர்ட்டிலும் நடவடிக்கை எடுத்துக்கொண்டார்கள். இதன் காரணமாக தாதாசார்யர்களும், சில கைக்கோளர்களும் சேர்ந்து 1864-ல் ஸ்ரீ தேசிகன் ஸந்நிதியின் கதவையே பூட்டியடைத்து மறுபடியும் 1870-ல்தான் திறந்தார்கள். 1878-ஆம் வருஷத்திய அசல் நெம்பர் 297 தீர்ப்பின் பாரா 31-ன் சில வாக்யங்களை இங்குக் காண்போம்.



"In the year 1864 the Tatacharis obtained from the Kaikalars on assignment of half the trusteeship of the Deepaprakasa Swamy's temple with this temple (Sri Desikar Shrine) as its appendage. Disputes arose between those parties and the Tenkalais in consequence of the assignment. The latter appealed to the magistrate. The appeal ended in a failure. They next preferred suit No. 307 of 1865 for the recovery of this temple and suit No. 310 of 1865 for the Deepaprakasa Swami's temple.........The temple in dispute (Sri Desikar shrine) which had been shut up by the Kaikalars and the Tatacharis in 1864 was opened in 1870." Para 32. "Then came upon the scene the party called the other Vadakalais in opposition to the Tatacharis. They secured the interest of Kandasamy (1st defendant) and some other Kaikalars and contrived to get the document 13 executed. The Kaikalars won over by them alleged therein that by virtue of the special condition in the counter part of 2 (the assignment to the Tatacharis) was cancelled and a quarter share of the tresteeship was assigned to the other Vadakalais. They also locked the temple again in September of the same year (1870).

இதனால் 1864 முதல் 1870 வரையில் ஸ்ரீ தேசிகனின் அவதாரஸ்தல தர்மகர்த்ருத்வ விஷயம் தாதாசாரியர்களுக்கும், கைக்கோளவர்க்கும் இதர வடகலையாருக்குமிடையில் பந்தாடப்பட்டு, இதனால் ஸ்ரீதேசிகன் ஸந்நிதியே ஒரு ஆறு வருஷகாலம் (1864 to 1870) பூட்டியடைக்கப்பட்டிருந்ததென்பது விளங்கும்.

மேலும் இந்த தீர்ப்பின் 35-வது பாராவில், இந்த அவதாரஸ்தல தேசிகன் ஸந்நிதியில் இதர வடகலையார்கள் முதன்முதல் அக்கரையெடுத்துக்கொண்டதே 1870ல் தான் என்பது விளங்கும். அதிலும் சில வாக்கியங்களை இங்குக் காண்போம்.

"I have next to see what right the other Vadakalais have in this temple. The evidence clearly shows that they had no connection with it before the execution of document 13 (1870). Soon after its execution the temple was closed. When it was re-opened in 1873 it was subject to the influence of the three sects, viz., the Kaikalars, the Tatacharis and the other Vadakalais in accordance with the document By, [Vide defence 11th and 18th witnesses and Ex. VII to X and Bn, to Br.]

இதனால் தாதாசார்யர்களைத் தவிர இதர வடகலையாருக்கும் இந்த ஸ்தலத்திற்கும் முதன்முதலாக ஸம்பந்த முண்டானதே 1870ல் தானென்றும், அவ்வருஷத்தில் இவர்கள் உறவு கொண்டாடத் துடங்கியவுடனே மறுபடியும் இந்த ஸந்நிதியின் கதவு அடைக்கப் பட்டு ஒரு மூன்று வருஷகாலம் பூஜையில்லாமலிருந்ததென்றும் விளங்கும். ஸ்ரீதேசிகனின் 6-வது நூற்றாண்டு விழா இந்த ரீதியில்தான் ஸ்ரீ காஞ்சியில் வடகலையாரால் கொண்டாடப்பட்டது.

ஸ்ரீரங்கத்தை நோக்கினாலும் இதே ரீதியைத்தான் அங்கும் காண்கிறோம். இதை விளக்கினால் ஓர் மஹா பாரதமாகும். பூலோக வைகுண்டம் என்று விளங்கும் இத்திவ்ய க்ஷேத்திரத்தில் தொன்று தொட்டுத் தென்கலைத்திருமண் காப்பும் ஸ்ரீ சைலேசதயா பாத்திரமுமே எங்கும் ஆசரணையில் இருந்துவருவது. இக்கோயிலில் உள்ள ஸ்ரீ தேசிகன் ஸந்நிதியும் இதே ரீதியில் தானிருந்தது. இங்கும் வடகலையார்கள் புது உறவு கொண்டு தங்களது விஷமச் செயல்களைச் செய்யவாரம்பித்தது 19-ம் நூற்றாண்டின் துவக்கத்தில்தான். கி. பி. 1803ல் தான் (11-8-1803ல்) முதன்முதலாக நவீன தேசிக பக்தர்கள் இந்த தேசிகன் ஸந்நிதியில் ராமானுஜாபாத்திரத்தை நுழைக்கவாரம்பித்தார்கள். இத்தகைய விஷமம் அப்போது திருமண்காப்பில் தொடரவில்லை. அது தென்கலையாகவேயிருந்ததை வடகலையார்கள் வெகுகாலம் ஆக்ஷேபிக்காமல் அங்கீகரித்தேயிருந்தார்கள்.

இந்த ராமா—பாத்திர விஷய விஷமம் அப்போது முளையிலேயே கிள்ளியெறியப் பட்டது. (இதைத் திருச்சிராப்பள்ளி ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டு கோர்ட்டு C. C. No. 9 of 1874 தீர்ப்பின் பாரா 15ல் காணலாம்) பிறகு வடகலையார் வேறு சில வழிகளில் இந்த திவ்யக்ஷேத்திரத்தின் மாமூல் வழிசளுக்கு விரோதமாகச் சில விஷமங்களைச் செய்யவாரம்பிக்கவே இதற்காக ஓர் ஸிவில் வியாஜ்ஜியம் (O. S. No. 130 of 1808) நடந்தது. இதன் முடிவாக ஸ்ரீரங்கம் ஸப்த ப்ராகாரங்களிலும் தென்கலையாரே ஸர்வாதிகாரிகளாக ஆக்கப்பட்டார்கள். ஸ்ரீரங்கம் கோவில் ஸ்ரீ தேசிகன் ஸந்நிதியின் திருமண்காப்பு 1835 வரையில் தென்கலையாகவே, நிராக்ஷேபமாகத் திகழ்ந்திருந்ததை, மேல் ப்ரஸ்தாவித்த C. C. No. 9 of 1874 தீர்ப்பில் பாரா 31ல் காணலாம். இதன் கடைசிவாக்யத்தை மாத்திரம் இங்குக் காண்போம்.

"Considering then the respective position of the parties in 1834 and the fact that in 1803 this Vedantachari is called **Tenkalai Vedantachari by a man** who calls himself on **arbiter** and espreally considering that there is **no evidence** that this curious expression of his was ever even challenged by the Vedakalai party it does seem most unreasonable to suppose that he has been constanty carried in Procession with a Vadakalai mark before 1835."

அதாவது—1834ல், தென்கலையார் வடகலையார் என்கிற இவ்விரு கக்ஷிகளும் இருந்த நிலையைக் கவனித்தால், இன்னும் முக்கியமாக 1803ம் வருஷத்திலேயே, மத்யஸ்தர் என்று சொல்லிக்கொள்ளும் ஒருவர் இந்த வேதாந்தாசாரியரை, தென்கலை வேதாந்தா

சாரியர் என்று ப்ரத்யேகமாகச் சுட்டிக்காட்டியிருந்ததை வடகலையார்கள் இதுவரையில் (1835) எந்த வியாஜ்ஜியத்திலும் எவ்விதமான ஆக்ஷேபத்தையும் தெரிவிக்காமலிருந்ததையும் கவனித்தால், இவர்க்கு (ஸ்ரீ தேசிகன் விக்ரஹத்திற்கு) வடகலை நாமமிட்டே மாமூலாக அடிக்கடி புறப்பாடு செய்வது வழக்கம் என்று இப்போது இவர்கள் புதியதாக வாதாடுவதை எக்காரணத்தினாலும் நம்பமுடியாகில்லை—என்பதாகும்.

1835ம் வருஷத்திற்குப் பிறகும் பல வருஷங்கள் ஸ்ரீ ரங்கநாதன் கோயிலில், ஸ்ரீமந்நாதமுனிகள், வேதாந்தாசாரியர் சந்நிதிகளில் மற்ற எல்லாவிடங்களிலும் போலவே தென்கலைத் திருமண்காப்பே விளங்கியிருந்தது. முதன்முதலாக திருமண்காப்பு விஷயமான கிளர்ச்சி 1863ல்தான் பலமாகக் கிளம்பியது. அப்போது (15-9-1863ல்) ஸப்த ப்ராகாரங்களிலுமுள்ள எல்லாத் திருமண்காப்புகளுக்கும் உத்யோகதோரணையில் கோயில் நிர்வாஹஸ்தர்களால் மத்யஸ்தர் முன்னிலையில் ஓர் பட்டியல் (list) தயார் செய்யப்பட்டது. அதன்படி ஸ்ரீமன் நாதமுனிகள், வேதாந்தாசாரியர் உட்பட எல்லா ஆழ்வாராசார்யர்களும் தென்கலைத் திருமண்காப்போடு கூடியே திகழ்ந்திருந்தனர். இந்த லிஸ்டு ஏற்படுவதற்குக் காரணம், வடகலையார், ஸ்ரீமன் நாதமுனிகளின் ஸந்நிதிக்கு வெளியில் சுவரின்மேல் ஒரு வடகலை நாமத்தைப் போட்டதே. இந்த லிஸ்டு எடுக்கப்பட்டபோதும், ஸ்ரீமன் நாதமுனிகளின் விக்ரஹமும் வேதாந்தாசாரியரின் விக்ரஹமும் தென்கலையாகவேயிருந்ததை வடகலையார் ஆக்ஷேபிக்கவில்லை. அதே வருஷத்தில் (1863ல்) அக்டோபர் மாதம் கலெக்டர் நிஸ்பெட் (Mr. Nisbet) என்பவரிடம் வடகலையார் தன்வந்தரி ஸந்நிதியில் ஒரு வடகலை நாமத்தைப் புதியதாய்ப் போட்டதாக ஓர் புகார் வந்தது. அவர் உடனுக்குடனே விசாரித்து, வடகலையாரின் ஆர்ப்பாட்டங்கள் பலமாகவிருந்ததால் அவர்களின் தலைவரான ஒரு ரெங்கசாமி ஐயங்காருக்கு, ஸ்ரீமன்நாதமுனிகளின் ஸந்நிதியின்மேல் சுவரில் ஓர் வடகலை நாமம் போட்டதற்காக ரூ 1000/- (30-10-1863ல்) அபராதம் விதித்தார்.

ஆனல், விசாரணையின் தோரணையில் அவர் சில சட்டமுறைகளை அனுசரிக்காததால் இந்த அபராதம் ஹைகோர்ட்டில் 21—7—64ல் ரத்து செய்யப்பட்டது. இதில் வடகலையாரின் விஷமம் ஹைகோர்ட்டுக்கு நன்ருகப் புலப்பட்டுவிட்டதால், அவர்கள் இத்தகைய பலத்த சூட்டைப்பெற்ற பிறகு ஒரு பத்து வருஷகாலம் வாளாவிருக்க வேண்டியிருந்தது. மறுபடியும் 1874ல்தான் ஸ்ரீமன் நாதமுனிகளையும் ஸ்ரீ வேதாந்தாசாரியரையும் வடகலை நாமத்தோடு வைகுண்ட ஏகாதசி உத்ஸவ அவஸரத்தில் பல பலத்த சூழ்ச்சிகள் செய்து எழுந்தருளப் பண்ணினுர்கள். இது விஷயமான வியாஜ்ஜியமே (C. C. 9 of 1874) திருச்சிராப்பள்ளி ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டு மிஸ்டர் பென்னிங்டன் [Mr. J. B. Pennigton] முன்னிலையில், சாங்கோபாங்கமாக விசாரிக்கப்பட்டு 28—3—1874ல் முடிந்தது. வடகலையாரின் வக்கீலோ, ஒரு நாளைக்கு ரூ. 1000/-க்கு மேல் வாங்கக்கூடிய ஓ' ஸல்லிவன் [O' Sullivan] என்னும் ஆங்கிலேய பாரிஸ்டர் [Barrister]. இவர்களுக்கு விதிக்கப்பட்ட அபராதமோ இவர்களின் தலைவரான கொடியாலம் ரெங்கசாமி ஐயங்காருக்கு ரூ. 1000/-மும் மற்ற பதினெரு வடகலை குற்றவாளிகளுக்குத் தலா ரூ. 51/-ம். இதைக் கட்டத்தவறினல் ஆறுமாதச் சிறை

தண்டனை, வசூலித்த தொகையிலிருந்து தென்கலையாருக்கு நஷ்டஈடு தரும்படியும் உத்தரவாகி இந்தத் தீர்ப்பு ஹைகோர்ட்டிலும் காயம் செய்யப்பட்டது. இத்தகைய வெகுபலமான தண்டனையும் இவர்களை ஒரு இருபது வருஷகாலமே அடக்கிவைத்தது. ஏனென்றால் மறுபடியும் 1893ல் இக்கோயிலின் தென்கலைத் திருமண்காப்புகளை மாற்ற ஓர் பலத்த முயற்சி செய்தனர். இவர்களில் சிலர் ஓர் இரவு (3—10—1893ல்) ஸ்ரீரங்கம் தேவஸ்தானத்திலுள்ள சேஷராயர் மண்டபத்துக்கு அருகாமையில் ஓர் மூலையில் ஒளிந்திருந்து பின் மாலை 3 மணிக்கு அம்மண்டபத்திலுள்ள கற்சிலைகளின் தென்கலைத் திருமண்காப்புகளை உளியைக்கொண்டு வடகலையாக மாற்ற முயன்றார்கள். இதன்மேல் நடந்த வியாஜ்ஜியத்தில் [C. C. No. 10 of 1894] இவர்களில் 9 பேருக்குத் தலா ரூ. 500/- அபராதமும், தலா 3 மாத கடுங்காவல் தண்டனையும் [Rigorous imprisonment] சேர்த்து விதிக்கப்பட்டது. இதுவும் ஹைகோர்ட்டு வரையில் காயம். ஜில்லா நீதிபதி இவ்வளவு கனத்த தண்டனை அவசியமில்லை என்று அபிப்பிராயப்பட்டதை ஹைகோர்ட்டு ஒப்புக்கொள்ளவில்லை. இதுவும் வேண்டும், மேலும் வேண்டும் என்றது. இதில் வடகலையாரின் வக்கீல் யாரென்றால் ஜகத்ப்ரஸித்திபெற்ற நார்டன் [Norton]. ஆயினும் இவர்களால் தப்பமுடியவில்லை. இத்தகைய விஷமச் செயல்களின் பலனைச ஸ்ரீதேசிகன் ஸ்ரீரங்கநாதன் முன்பாக மற்ற ஆழ்வாராசார்யர்களுக்கு ஸமமாக ப்ராசீனமாய் அனுபவித்துவந்த மரியாதையை இழக்கும்படி செய்தார்களேயொழிய இவர்கள் அங்கு ஒருவித லாபமும் அடையவில்லை.

ஸ்ரீ காஞ்சியிலும் ஸ்ரீரங்கத்திலேயும் 19-வது நூற்றாண்டு தொடக்கம் முதல் கடைசி வரையில் மேல்காட்டிய ரீதியில் வடகலையார் "நாடு அறிய நகரமறிய ஊரறிய உலகமறிய கோர்ட்டு அறிய கொத்தளமறிய" ஸ்ரீ தேசிகனின் 6-வது நூற்றாண்டு விழாவைக் கொண்டாடியிருக்கும்போது அவர்கள் அந்த விழாவை ஏன் கொண்டாடவேயில்லை என்கிற கேள்வி யெழுவதற்கே யிடமில்லையன்றோ!! ... ... ○

## கோயிற்கடிதமொன்று.

திருவரங்கம் பெரிய கோயிலில் அடியேனுக்கு ஆப்தர்கள் பலர் இருப்பதால் அவ்விடத்து விசேஷங்களை ஸமய விசேஷங்களில் தெரிவித்து மகிழ்விக்கிறார்கள். 12—9—68ல் கிடைத்த கடிதமொன்றில்—"எம்பெருமானார் ஸன்னிதியில் ஸ்ரீமதுபயவே. அபிஷேகம் ஸ்வாமி ஸாதித்துவரும் பகவத்விஷய காலக்ஷேபத்தில் *மாசறு சோதியும் *ஊரெல்லாந்துஞ்சியும் நடந்த அதிசயம் என்னவென்றெழுதுவது? ஊரெல்லாம் துஞ்சிக்கு மணவாளமாமுனிகள் அருளிய பாசுரம் "ஓதுவதிங்கு எங்ஙனேயோ" என்று தலைக் கட்டுகின்றதே, அந்த அடியைத்தான் விஜ்ஞாபிக்கலாகிறது. ஆனால் சிறிதுவாசியுண்டு; அங்கு 'துயர் ஓதுவதிங்கெங்ஙனேயோ' என்றுள்ளது; இங்கு *மகிழ்வோதுவதிங் கெங்ஙனேயோ* என மாற்றி விஜ்ஞாபிக்கவேண்டியிருக்கிறது." என்கிற வாசகங்களைக் கண்டு மதுவனத்தில் புகுந்த வானரமுதலிகள் பட்டபாடுபடுகிறேன். கீர்த்திமூர்த்தியான

திருக்கண்ணபுரம் பட்டப்பா ஸ்வாமி பலகால் ஸாதிக்கக் கேட்டவார்த்தையொன்றுண்டு; "ஸ்ரீபாஷ்யாதிகாரிகள் துர்லபர்கள், பகவத்விஷயாதிகாரிகள் ஸுலபர்கள் என்று பலர் நினைப்பதும் சொல்லுவதுமுண்டு: இது தலைகீழானவார்த்தை: ஸ்ரீ பாஷ்யாதிகாரிகள் ஸுலபர்கள், பகவத் விஷயாதிகாரிகள் துர்லபர்கள் என்று (ஸ்ரீபெரும்பூதூர்) குண்டலம் ஸ்வாமி அடிக்கடி ஸாதிக்கக் கேட்டிருக்கிறேன்" என்று. இதேவார்த்தையை ஸ்ரீமதாஸூரி பெரிய ஸ்வாமியும் ஸாதிக்கக் கேட்டிருந்தேன். "தமிழ்ப் பாட்டுதானே, ஸர்வாதிகாரந்தானே" என்று ஸாமான்யர்கள் பேசுவர். தொண்டரடிப்பொடியாழ்வார் *இரும்புபோல் வலியநெஞ்சம் இறையிறையுருகும்வண்ணம்* என்று ப்ரமேயத்தைப்பற்ற அருளிச்செய்தது ப்ரமாணத்திற்கு ஆகவேண்டுமானால் பகவத்விஷய சாஸ்த்ரத்திற்கன்றி வேறென்றுக்காருமோ? ஸ்ரீபாஷ்யாதிகாரிகளுக்கு [வக்தாக்களுக்கும் ச்ரோதாக்களுக்கும் வாசியற] பாண்டித்யமிருந்தால் போதுமானது. பகவத்விஷயாதிகாரிகளுக்கு அது மட்டும் போதாது; *ஊற்றின்கண் நுண்மணல்போல் உருகாநிற்பர்நீராயே* என்றும், *ஒன்பதோடொன்றுக்கும் மூவுலகும் உருகுமே* என்றும் ஆழ்வார்தாமே பலச்ருதியாக வைத்து ஸாதிப்பதொன்றுண்டே அது வேணும், அதுதான் முக்கியமாகவேணும்.

கம்பர் சடகோபரந்தாதியில் *கூட்டங்கள்தோறும் குருகைப்பிரான் குணங் கூறுமன்பர் ஈட்டங்கள்தோறு மிருக்கப்பெற்றேம்* என்றதும், உடனே "இருந்தெம் முடைய நாட்டங்கள்தோறும் புனல்வந்து நாலப்பெற்றேம்" என்கிறார்: இந்தப் பாசுரத்தைக்கொண்டே கம்பர் பட்டருடைய பகவத்விஷய ப்ரவசனகோஷ்டியில் அந்வயித்திருந்தவரேயல்லது நாதமுனிகள் காலத்தவரல்லர் என்று அடியேன் அறுதியிட்டுரைப்பது. மற்றும் பல சான்றுகளில் இதுவொரு தலையான சான்று. ஆழ்வார்கள் அப்ரமேய பாக்யசாலிகளாயினும் பகவத்விஷய ப்ரவசனகோஷ்டியில் அந்வயித்திருந்து களிக்கும் பாக்கியமொன்று அவர்கள் பெறாதிருந்தது குறையே. திருமங்கையாழ்வார் திவ்யதேசங்களில் தமக்குக் கிடைத்த ச்ரவணானந்தத்தைத் தமது திருமொழியில் அருளிச் செய்துவைத்திருக்கிறார். திருக்கோவலூரில் *மண்டபமொண் தொளியனைத்தும் வாரமோத* என்கிறார். தொளியென்று தெருவுக்குப் பெயர். *ரத்யா ப்ரதோளீர் விசிகா* என்ற அமரகோசத்தில் (ப்ரதோளி) யென்பது உபஸர்க்கம் நீங்கித் தொளியென்று கிடக்கிறது. வீதிகள்தோறும் வாரமோதக் கண்டாராழ்வார். வேதத்தில் வாரஞ் சொல்லுவதென்று ஒரு ப்ரக்ரியையுண்டு; பதசர்ச்சை என்பது. இவ்வாழ்வார் தாமே தேரழுந்தூர்க்கு எழுந்தருள, அங்குக் கிடைத்த ச்ரவணானந்தத்தை "முதுநான்மறை வீதிதோறும் அலையாருங்கடல்போல் முழங்கும் தென்னழுந்தை" என்ற பாசுரத்தினால் வெளியிட்டருளினார். அவர் பெற்ற ச்ரவணானந்தம் அவ்வளவே போலும்.

குலசேகராழ்வார் அரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளுங்கோவை *அந்தமிழி னின்பப்பாவோடே ஸமாநாதிகரித்து அரங்கனை அருளிச்செயல் மூர்த்தியாகவே பணித்தார். அவ்வரங்கனுடைய திருவீதிகளிலே செவிக்கினிய செஞ்சொற்களின் ப்ரவசனங்கள் இடையறாது நடைபெற்றுவரவேணுமென்று அகமகிழ்ந்து ஆசாஸித் நிற்கிறேன். கீர்த்திமூர்த்தியான சிங்கமையங்கார்ஸ்வாமி பாடசாலையில் ஸ்ரீ பாஷ்ய புராணரத்ன ப்ரவசனங்களுக்கும் நித்யஸ்ரீர் நித்யமங்களம். ... ...

# "பொங்கும் பரிவு." (ஸ்ரீஜயந்தியநுபவம்)

ஆழ்வார்களுள் க்ருஷ்ணாவதாரத்தில் ஆழங்காற்படாத ஆழ்வார் ஒருவருமிலர். ஆனாலும் இதில் பெரியாழ்வாரையொத்த ஆழ்வார் வேறு எவருமிலர். பெரியாழ்வார் திருமொழியில் *சீதக்கடலுள்ளமுதன்னதேவகி* என்கிற திருமொழி தொடங்கி *சீலைக் குதம்பை* பதிகம் முடிய இருநூற்றிருபது பாசுரங்களினால் பெரியாழ்வார் காட்டியருளின க்ருஷ்ணத்ருஷ்ணையை க்ருஷ்ணத்ருஷ்ணா தத்வமென்று பேர்பெற்ற நம்மாழ்வாரும் காட்டிற்றிலர். *அல்லழக்கொன்றுமில்லா வணிகோட்டியர்கோன் அபிமானதுங்கன் செல்வன்* என்றும் *நளிர்ந்தசீலன் நயாசலன் அபிமானதுங்கன் நாடொறும் தெளிந்த செல்வன்* என்றும் பேசும்படி தம்முள்ளத்தைக் கொள்ளைகொண்ட செல்வநம்பி வாழ்ந்தது திருக்கோட்டியூரிலாதலால் அந்தத் திருக்கோட்டியூரையே க்ருஷ்ணாவதார க்ஷேத்ரமாகச் சிந்தைசெய்து அவதாரகாலத்து ஸம்ப்ரமங்களை அற்புதமாகப் பேசி வருகையில் *கிடக்கில் தொட்டில் கிழியவுதைத்திடும், எடுத்துக்கொள்ளில் மருங்கை யிறுத்திடும், ஒடுக்கிப்புல்கில் உதரத்தே பாய்ந்திடும், மிடுக்கிலாமையால் நான்மெலிந்தேன் நங்காய்!* என்ற பாசுரம் அவதரித்த அழகை என்சொல்லுவோம். மேற்பதிகங்களிலே *அசோதை முன்சொன்ன* புற்றரவல்குலசோதை நல்லாச்சி —கற்பித்தமாற்றம்* என்றாப் போலே 'இங்ஙனே அசோதை சொன்னாள்' என்னவேண்டியிருக்க, அவ்வண்ணம் சொல்ல மாட்டாதே *மிடுக்கிலாமையால் நான் மெலிந்தேன் நங்காய்* என்று யசோதையின் தாதாத்ம்யத்தை ஆழ்வார் நொடிப்பொழுதில் அடைந்த விசித்திரம் நெஞ்சால் நினைப்பரிதே. கோபஜன்மத்தை ஆஸ்தானம் பண்ணினவீறு இதுவன்றோ.

*அரவணையாய் ஆயரேறே!* போய்ப்பாடுடைய* தன்னேராயிரப்* அஞ்சன வண்ணனை* சீலைக்குதம்பை* என்னுமிந்த ஐந்து திருமொழிகளும் அமைந்திருக்குமழகை பக்தர்கள் ஆயுள் முழுவதும் அநுபவிக்கலாமே. "கண்ணா! கடல்வண்ணா! நின்தந்தையும் தாழ்த்தான், கஞ்சன் கடியன், பித்தனே! உன்னைக் காப்பாருமில்லை தனியே போய் எங்குந்திரிதி" என்னுமிந்த வார்த்தைகள் யசோதையின் வாக்கிலே வந்ததாக "சீராலசோதை திருமாலைச் சொன்னசொல்" என்று ஆழ்வார் ஸாதித்தாலும் யசோதைக்கு இத்தகைய பொங்கும் பரிவு இருந்ததுண்டா? என்று அடியேன் சிந்தித்துப் பார்த்தேன். இருந்திராதென்றே அறுதியிட்டது என் பாவிநெஞ்சு; ஆழ்வார் தம்முடைய பொங்கும் பரிவை அசோதையின் மேலிட்டுக் காட்டினாரத்தனையேயென்று திண்ணமாக வெண்ணுக.

ஒப்புயர்வற்ற இத்தகைய பரிவன்றோ இவ்வாழ்வாரைத் தலைநீர்ப்பாட்டிலே பல்லாண்டு பாடுகையிலே மூட்டிற்று. இந்தப் பரிவேயன்றோ இவரைப் பெரியாழ்வாரென்னப் பண்ணிற்று. இதனை உள்ளபடி தெரிவிக்கின்ற உபதேசரத்தினமாலைப் பாசுரம் அப்போது ஒரு நூறு வருடங்களுக்குமுன்பு திருவவதரித்திருந்ததாகில் "கோதை சூடிக் களைந்த மாலையைப் பெருமாளுக்கு ஸமர்ப்பித்ததனால் பெரியாழ்வாராயினர்" என்கிற (கோதாஸ்துதி-10) உல்லேகம் தோன்றியிராதே. ஜடாயுமஹாராஜர் *யாமோஷதிமி வாயுஷ்மந்* என்று மங்களாசாஸனம் பண்ணிப் பெரியவுடையாரென்று பேர்பெற்றதை நினைப்பது.

"மங்களா சாசனத்தில் மற்றுள்ள ஆழ்வார்கள்
தங்கள் ஆர்வத்தளவு தானன்றிப் — பொங்கும்
பரிவாலே வில்லிபுத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான்
பெரியாழ்வாரென்னும் பெயர்."

ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீரங்க தேவஸ்தான வ்யவஹாரஸாரம்

[கீழே ஸ்ரீஉவே. நல்லப்பா. ஜீயப்பங்கார் ஸ்வாமியின் கட்டுரையில் சுருக்கமாகக் காட்டப்பட்ட விஷயங்களின் விளக்கம்.]

1. ஸ்ரீரங்கம் தேவஸ்தானம் ஈஸ்டு இண்டியா கம்பெனியார் மானேஜ்மெண்டில் இருந்தபோது கோவில் அதிகாரியான வேலு என்பவர், கலெக்டர் வாலஸ்துரைக்கு தென்கலை வடகலை தகராறுகளைப்பற்றி 15—8—1803ல் எழுதினர். (அதாவது)—

"இதுநாள்வரை ஏற்பட்ட மாமூல்படி தான் கோவில் காரியங்கள் நடக்கவேணு மென்று ஸமூகம் உத்தரவு. அந்த மாமூல்படியே தென்கலை வேதாந்தாசார் திருவத்ய தினமும் தென்கலையார்கள் சடங்குகளை நடத்தியிருக்க, வடகலையார்கள் மாமூலுக்கு விரோதமாக ராமாநுஜதயாபாத்ரம் என்கிற மந்திரத்தைப் புதிதாகச் சொல்ல ஆரம்பித்த வுடன் தென்கலையார்கள் இது நூதனச் செயலென்று ஆக்ஷேபித்தும், அவர்களில் சில ஸன்யாசிகள் இந்த அநீதிச்செயல் அவமானகரமென்று சொல்லி எழுந்துபோயும்...... வடகலையாரில் 3, 4 பேர்கள் துஷ்டர்கள் கம்பெனியார் ஆளுகைக்கே பயப்படாமல் நூதன காரியங்கள் செய்யத் துணிகிறபடியால் மாமூலுக்கு விரோதமாக நடப்பவர்கள் தண்டிக்கப்படுவார்கள் என்று தண்டோரா போடவேண்டும்"—என்று எழுதினர்.

2. மத்யஸ்தரென்று ரிகார்டுகளில் வழங்கப்படுகிற ஷை வேலு மறுபடி 13—9—1803ல் எழுதுகிருர்—சில வடகலையார்கள் தன்னிடம் மனுக் கொடுத்துக் கொண்டிருப்பதாகத் தெரிவிக்கிருர்—(அதாவது) "முன்காலம்முதல் இதுவரை தென்கலை யாரே கோவிலில் எல்லாவிதமான பாத்யங்களையும் ஏகதேசமாக அனுபவித்துவந்திருக் கிருர்களே; தற்போதைய கம்பெனியார் ஆளுகையில் எங்களுக்கும் சில பாத்யங்களாவது நீங்கள் ஏற்படுத்திக் கொடுக்கக்கூடாதா? என்று கேட்கிருர்கள்" என்று. இதிலிருந்து தென்கலையாருக்குத்தான் கோவிலில் எல்லா பாத்யங்களும் ஏகதேசமாகவுண்டென்றும், வடகலையார்கள் நூதனமாகப் போராட வருகிருர்களென்றும் தேறுகிறது.

3. பிறகு 28—4—1808ல் ஜில்லா கோர்ட் ஜட்ஜ் லாதாம்துரை தீர்ப்பு:— "தென்கலையார்களே ஸ்ரீரங்கம் ஸப்தப்ராகாரத்துக்குள் ஸ்வாமிக்குச் செய்யப்படும் எல்லாச் சடங்குகளிலும் ஸர்வாதிகாரிகளென்றும் இக்கோவிலிலுள்ள எல்லாத் திருமண்களும் தென்கலையாயிருப்பதாலும் மற்ற காரணங்களாலும் தெளிவாயிருக்கிற தென்றும், தென்கலையாருக்கே கோயில் ஸப்தப்ராகாரம் ஏற்பட்டதென்றும், வடகலையார்களை அந்த ப்ராகாரங்களுக்குள் குடியிருக்க அனுமதிக்கப்பட்டதானது தென்கலையார்கள் சொல்படியே அவர்கள் வீட்டிலும் கோவிலிலும் அத்யாபக வேத பாராயண எல்லாச் சடங்குகளையும் நடத்த ஸம்மதித்ததின் பேரில்தான் என்பது வ்யக்தமாகிறது. அனேக ருஜுக்களால் கோவிலில் தென்கலையார்களின் ஆதிபத்யம் ஊர்ஜிதமாகிறது வெகுநாளாக தென்கலையார்களே அநுபவித்துவந்த பாத்யங்களில் வடகலையார் எவ்விதத்திலாவது தலையிட்டுத் தடுத்தார்களானால் அவர்களை சரீரசிக்ஷை, ஸப்தப்ராகார பஹிஷ்காரம், அல்லது சிறைக்கு உள்ளாக்கவேண்டும்."

4. ஸமீப காலத்தில், அர்ச்சகர்களின் நமஸ்கார கேஸில் ஸப்கோர்ட்டு ஜட்ஜ்மெண்டில் அப்பீலதிகாரியான ஜட்ஜ் எழுதுகிறார்—

"இவ்வளவு வ்யக்தமாயும் ஸுஸ்பஷ்டமாயும் கோவில் வழக்கத்தை நிர்த்தாரணம் செய்து, நூறு வருஷங்களுக்கு மேற்பட்ட காலமாக எல்லாக் கோர்ட்டாராலும் ஒத்துக்கொள்ளப்பட்ட இவ்வளவு மிக புராதனமான ஒரு தீர்ப்பை ஒரு விதத்திலும் நிராகரித்தல் முடியாதது." என்று.

85. மேலே கண்ட 1808ஆ ஜில்லா ஜட்ஜ் தீர்ப்பை ரத்து செய்துகொள்ள வடகலையார்கள் அந்த தேதி முதல் தீவிரமான முயற்சிகள் செய்தும் அந்த தீர்ப்புக்கு இன்னும் பலமே ஏற்பட்டு வருகிறது.

5. அப்பீல் கோர்ட்டு— 14—12—1835.

"வடகலையார்கள் மிகவும் பிடிவாதத்துடன் சட்டத்தை மீறி தென்கலையார்களின் பாத்யத்தை நிராகரித்து வருகிறார்கள். அவர்களின் அபிப்ராயம் என்னவென்றால், ஓயாமல் ஹிம்ஸித்துத் தொந்தரவுசெய்து வந்தால் தென்கலையார்கள் பலஹீனர்களாய் தங்கள் பாத்யத்தையெல்லாம் விட்டு விட்டு ஓடிவிடமாட்டார்களா என்பதுதான். தென்கலையார்கள் நிராக்ஷேபமாக தங்கள் பாத்யங்களை அநுபவிக்கவேண்டிய ஸௌகர்யம் செய்து கொடுப்பதுடன் சட்டத்தை மீறி நடப்பவர்களுக்கு சரியான புத்தி கல்பிக்கவேண்டும்."

6. கலெக்டர் உத்தரவு— 13—4—1820.

"கோவிலில் சாஸ்த்ர ஸந்தேஹம் ஏற்பட்டால் சாஸ்த்ரஜ்ஞர்களாய் தென்னாசார்ய ஸம்பிரதாயஸ்தர்களாயிருப்பவர்களையே கலந்துகொள்ளவேணும்."

7. 1822ல் வடகலையாரில் சில 1808 தோன்றிய [முன்னம் உதஹரிக்கப்பட்டிருக்கிற] ஜில்லா ஜட்ஜ் தீர்ப்பை மீறி நடந்துகொண்டார்களென்கிற குற்றத்திற்காக அவர்களை ஆர்யபட்டாள் வாசலுக்குள் விடாமலிருக்க உத்தரவிட்டு நன்னடத்தை ஜாமீன் வாங்கி, பிறகு உள்ளே விடப்பட்டார்கள்.

8. 1829ஆ முதல் பலதடவை ஸ்ரீமத் அஹோபிலம் ஜீயர் ஸ்ரீரங்கம் எழுந்தருளின்போது நிசான் சுருட்டி முதலான எடுபிடி ஸாமான்கள் தெருவிலே கொண்டு வரப்படுகையில் தடையுத்தரவு ஏற்பட்டிருக்கிறது. ஸ்வஸ்திவாசனம் மாத்திரம் தென்கலை ஸ்வாமிகளைக்கொண்டு செய்துகொள்ள அநுமதியளிக்கப்பட்டது.

9. 1874ஆ பென்னிங்டன் ஜட்ஜிமெண்டு கொடியாலம் ரங்கஸாமி ஐயங்கார் ஸ்ரீரங்கதேவஸ்தானத்தைச் சேர்ந்த தென்கலை வேதாந்தாசாரியாருக்கு நூதனமாக வடகலை நாமமிட்டு விக்ரஹத்தை ஏள்ளப் பண்ணிவைத்த குற்றத்தின் பேரில் தோன்றிய இந்த ஜட்ஜ்மெண்டின் ஸாராம்சம்—

"வடகலையார்கள் துராகிருதமாய் 1808ஆ தீர்ப்பை நிராகரிக்கவே வழிதேடி வருகிறார்கள். இங்கே தென்கலையாருடைய பாத்தியம் நிஸ்ஸந்தேஹமாயும் புராதனமாயுமிருக்கிறது. 1863ஆ வரை கோவிலிலுள்ள எல்லாத் திருமண்களும் (அதாவது)

மதிள்கள் சுவர்கள் பாத்ரங்கள் எடுபிடி சாமான்கள் பிம்பங்கள் ஆகிய எல்லாவற்றிலுமுள்ள எல்லா நாமங்களும் அப்போது லிஸ்டு எடுத்ததில் ஏகதேசமாய் தென்கலை நாமங்களேயென்று தெரியவருகிறது. தேசிகருக்கு இட்ட வடகலை நாமம் துராகிருதமாயும் சட்ட விரோதமாயும் வழக்க விரோதமாயும் தெரிகிறது. தென்கலையார் மனதை புண்படுத்தவேணுமென்கிற கெட்ட எண்ணங்கொண்டே தேசிகர் நாதமுனி விக்ரஹங்களை புதிதாக வடகலை நாமமிட்டு ஏள்ளப்பண்ண (கொடியாலம்) ரங்கஸாமி ஐயங்கார் ஏற்பாடு செய்தார். இந்த குற்றத்திற்கு ரூபாய் ஆயிரம் அபதராதம். கட்டத்தவறினால் பேரி தண்டனை."

10. இது ஹைகோர்ட்டுவரை அப்பீலில் காயம் செய்யப்பட்டது.

அதற்குப்பின் சில வருஷங்கள் கழித்து, வடகலை நாமமிட்ட தேசிகநாதமுனி விக்ரஹங்களை ஏள்ளப்பண்ணவேண்டுமென்று பிறரால் கொண்டுவரப்பட்ட 4 கேஸ்கள் ஹைகோர்ட்டு வரையில் வந்து தள்ளப்பட்டன. 1808ௗ தீர்ப்புப்படி கோவிலிலிருக்கும் எல்லா ஸ்வாமிகளுக்கும் தென்கலையாசாரப்படி பூஜாகார்யங்கள் செய்ய வேண்டியதென்கிற தீர்ப்புகளுக்கு விரோதமாகவே வடகலையார்கள் கேட்டுக்கொள்ளுகிறார்கள். இப்படி செய்யக்கூடாதென்று ஹைகோர்ட்டு தீர்ப்பில் கண்டிருக்கிறது.

11. 1894ௗத்தில் சேஷராயர் மண்டபத்திலிருந்த தென்கலைத் திருமண்களில் பாதங்களை உளியால் வெட்டி மாறுபடுத்த வடகலையார்கள் ப்ரயத்தனம் செய்தார்கள். இது அவர்களுடைய துராகிருதம் என்று தீர்மானம் செய்து......இன்னும் அனேக வியாஜ்யங்களும் தோன்றி வடகலையார்க்கு மூன்றுமாத தண்டனையும் 500 ரூ. அபராதமும் விதிக்கப்பட்டது.

12. ஸ்ரீரங்கம் சித்திரை வீதியில் ப்ரைவேட்ஹவுஸ்ஸில் கட்டப்பட்ட தேசிகர் கோவிலிலுள்ள விக்ரஹத்தை வடகலை நாமத்துடன் வீதிகளில் கொண்டுவரக்கூடாதென்று மாஜிஸ்டிரேட் செய்த உத்தரவின்மேல் 1909ௗ வியாஜ்ஜியம். திருவேந்திபுரம் கேஸில் மணவாளமாமுனிகள் விக்ரஹத்தை பப்ளிக் தெருவில் ஏள்ளப்பண்ணலாமென்று ப்ரிவிகௌன்ஸிலில் எப்படி ஏற்பட்டதோ, அப்படியே ஸ்ரீரங்கத்தில் வெளிதேசிகர் விக்ரஹத்தை வீதியில் ஏள்ளப்பண்ணுவோமென்று வடகலையார் வாதித்தார்கள். இந்த தாவாவில் எல்லா தஸ்தாவேஜுகளும் தாக்கல் செய்யப்பட்டு பரிபூர்ணமான பரிசீலனை நடந்ததில் (மேலே காட்டிய) 1808ௗ தீர்ப்பு ஊர்ஜிதம் செய்யப்பட்டது. "இங்கே தென்கலை ஆதிக்யம் புராதானம்; வடகலையார் நாளடைவில் ஆக்ரமிக்க வந்தவர்கள்; கோவில் சடங்குகளெல்லாம் தென்கலைபரம்; நாமங்கள் யாவும் தென்கலை. சில வெளிச் சுவர்களில் கொஞ்சம் கொஞ்சமாக வடகலை நாமம் போட ஆரம்பித்தார்களேயொழிய புராதனமில்லை" என்று எழுதப்பட்டிருக்கிறது.

13. 1907ௗ ஸ்ரீரங்க நாராயணஜீயர் வாதி; அவருடைய பாத்யத்தைப்பற்றின வியாஜ்ஜியம் இதில் முடிவு;—கோவில் சடங்குகள் எல்லாம் தென்கலை; பூஜாவிதி எல்லாம் ஜீயர் மேல் விசாரணை கர்த்தர் என்று முடிக்கப்பட்டது.

வடகலை வேதபாராயணக் கேஸ் தோன்றினபோது முன்னம் குறித்த 1808ௗ லாதாம் துரையின் தீர்ப்புதான் கோவில் ஆசரணையை நிர்த்தாரணம் செய்தது.

14. வெகுகாலம் நடந்துவந்த அர்ச்சக நமஸ்கார வ்யாஜ்ஜியத்தில் ஜட்ஜ்மெண்டு —(16-1-53).



"மேலே குறிக்கப்பட்ட தஸ்தாவேஜுகளிலிருந்து 1808க்கு வெகுநாள் முன்னமே பிடித்து தென்கலையார் ஆதிக்யமே. ஒவ்வொரு விவஹாரத்திலும் தென்கலையார் பாத்யமே நிலைநிற்கிறது. அர்ச்சகர்கள் தென்கலையாசாரத்திற்கு அனேகவிதத்தில் சட்டுப்பட்டிருக்கிறார்கள். தென்கலை நாமங்களே மிகவும் விசேஷமாயும் அதிகமாயும் உள்ளது. ஸ்ரீசைலேச தயாபாத்ரம் ஏகச்சத்ராதிபத்யமாய் ப்ராகேஷ்பமானது. பஞ்சாங்கபட்டனம், சத்யத்ரயபட்டனம், கைசிகபுராணபட்டனம், ஆயனுர் படிப்பு, அத்யாபக கைங்கரியம் எல்லாவற்றிலும் ஸ்ரீசைலேசபாத்ரம் தென்கலை வாழி திருநாமம் இவைகள் ப்ராகேஷபணையான வழக்கம். மிராசு ஆபீசுகளெல்லாமும் எல்லா மரியாதைகளும் தென்கலையாருக்கே; இதுகளிலிருந்து கோவில் ஆசாரணை தென்கலையென்பது ஸுஸ்பஷ்டம். வக்கீல் ஸ்ரீனிவாஸய்யர் [டிரஸ்டிகளில் ஒருவர்] தென்கலை வடகலை கலஹங்களில் கலந்தவரல்ல; பிரபல வக்கீல். இவரது அபிடவிட்டு மிகுந்த கௌரவத்துடனேற்றுக்கொள்ளத் தக்கதே."

15. மேலே தெரிவித்த ரிகார்டுகள் தவிர இன்னும் நூற்றுக்கணக்கான ரிகார்டுகள் ஸ்ரீரங்கத்தில் தென்கலைத் திருமணும் தென்கலை யாசாரமுமே புராதனம் என்று நிர்த்தாரணம் செய்யக்கூடியவைகளா யிருக்கின்றன. அவையெல்லாம் தனிப் புத்தகமாக வெளிப்படுத்த வேண்டியவை.



16 இந்த ஸ்ரீரங்கம் கோவிலில் வடகலையார்கள் தங்களுக்கு ஸாதகமாக ஒரு விஷயம் சொல்லக்கூடும்; அதாவது—வடகலை நாதமுனி ரெங்கையங்கார் தன்வந்தரி கோவிலில் வடகலைநாமம் போட்டதற்காக கீழ்க்கோர்ட்டில் அவர்க்கு ஆயிரம் ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டிருந்தது; அது ஹைகோர்ட்டில் ஒரு டெக்னிகல் பாயிண்டில் ரத்து செய்யப்பட்டது. இந்த விஷயத்தை வடகலையார்கள் தங்களுங்கு அநுகூலமாகச் சொல்லிக்கொள்ளலாம். இந்த கேஸில் வடகலைநாமம் போடலாமென்று தீர்ப்பு செய்யப்படவில்லை. அது தப்பு என்றுதான் முடிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் "இந்த கேஸ் சட்டமுறைப்படி நடத்தப்படவில்லை" என்கிறவொரு லாபாயிண்டின் கீழ் அபராதம் தள்ளுபடியாயிற்று. இதனால் ஒரு ஸாதகமுமில்லை.

17. கொடியாலம் ரங்கஸாமி ஐயங்கார் தென்கலை வேதாந்தாசாரியருக்கு வடகலை நாமமிட்டு வெளியில் கொண்டுவந்த குற்றத்திற்காக ஆயிரம் ரூபாய் அபராதம் விதித்த ஜட்ஜ்மெண்டில் ஷை தன்வந்தரி கோவில் திருமண் கேஸில் அபராதம் ரத்து செய்யப்பட்டதானது சோசனீயமென்றும் அதனால்தான் வடகலையார்களுக்கு துராகிருதம் செய்வதில் உற்சாகமுண்டாயிற்றென்றும் காட்டப்பட்டிருக்கிறது.

18. ஸ்ரீரங்கத்தைப்பற்றி ரிகார்டுகள் ஸம்பந்தமாகத் தெரிவிக்கவேண்டிய விஷயங்கள் பாரத ராமாயணங்கள்போலே யிருந்தாலும் தற்காலம் இவ்வளவு போதும்.

ஸ்ரீரங்கம் தேவஸ்தான வ்யவஹார ஸம்பந்தமாக மேலே விவரிக்கப்பட்டிருக்கிற விஷயங்கள் ஷை கோவில் ரிகார்டுகளிலிருந்து நான் எடுத்துக் கொடுத்தவையே.

(Sd.) V. N. VENKATAVARADACHARI,
Advocate, Vedavilas, Madras-8.